# பர்ளுத் தொழுகைக்குப் பின் துஆ ஓதலாமா?

أُجِيبُ دَعْوَةَ الدَّاعِ إِذَا دَعَانِ

நிச்சயமாய் என்னிடம் துஆக் கேட்பவனின் துஆ விற்கு பதிலிறுக்கிறேன்

ஆசிரியர் :
A. முஹம்மது அப்துல் கபூர் ஸயீதீ

வெளியீடு :
சுலைமானிய்யா பப்ளிஷர்ஸ்
28 நாராயணசாரய் கிராமணித் தெரு, சென்னை 600 001.

தபால்பெட்டி எண் : 1886

بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

# முன்னுரை

அல்லாஹு தஆலா தன் அடியார்கள் நேர்வழி பெறும் பொருட்டு வேதத்தையும், ரஸூல்மார்களையும் அனுப்பி வைத்தான். அல்லாஹு தஆலாவிலேயே தன்னை நாத்துக் கொண்ட எம்பெருமானார் (ஸல்) அவர்கள், அவனது அருட்கொடையாய் உதித்து, நம்மை அருள்பெற்ற அடியார்களாய் ஆக்கியுள்ளனர். இதையே அல்லாஹு தஆலா ''நீங்கள் தாம் மனிதர்களிடையே தோன்றியவர்களில் நல்ல சமுதாயம்'' என்று உறுதிப் படுத்துகிறான். ரஸூல் (ஸல்) அவர்களுக்குப்பின் அவர்கள் தோழர்கள் — ஸஹாபாக்கள் — தீன் சுடரை நாயகம் (ஸல்) அவர்கள் கற்பித்தது போல், அணுவளவேனும் மாறுபடாமல் காத்து இஸ்லாத்தை அதன் புனிதத் தன்மை மாறாமல் நிலைப்படுத்தி வாழ்ந்தும், வழிவகுத்தும் சென்றனர். அதன்பின் வந்த அவர்களின் தோழர்கள் — தாபிஈன்கள், தபஉ தாபிஈன்கள். தீனுல் இஸ்லாத்திற்கு எக்காலமும் மாறாத ஒரு வடிவம் தருவதே நமக்குப்பின் மார்க்கம் நடைமுறையிலிருக்க வகை செய்வது என்பதை கண்டு, (ஸஹாபாக்களின் காலத்தில் குர்ஆன்-சேகரிக்கப்பட்டு ஒன்றுசேர்க்கப்பட்டதுபோல்) ஹதீதுகளைத் திரட்டித் தொகுக்க வழிவகுத்தனர். இவர்கள் காலம் ஹதீதுகளை புனருத்தாரணம் செய்து, அன்றைய குழப்பவாதிகளின் பொய் புரட்டுகளிலிருந்து காப்பதிலேயே சென்றது; ஆதாரப் பூர்வமான ஹதீதுகள் இனங்காணப்பட்டு; புனைந்து கூறப்பட்ட ஹதீதுகள் களை யெடுக்கப்பட்டு, ஸுன்னத் வல்ஜமாஅத் அதன் தீனுல் இஸ்லாத்தின்-கொள்கை வடிவம் பெற்று மக்கள் மனதில் வேரூன்ற ஆரம்பித்தது.

இந்தக் காலக்கட்டத்தில் தோன்றியவர்களே முஜ்தஹிதீன்கள் என்னும் இஸ்லாத்தின் உயிர்நாடியான ஷரீஅத்தின் கோட்பாடுகளையும், சட்ட திட்டங்களையும் பாதுகாக்கும் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டவர்கள், முந்தைய காலத்தில் ஹதீதுகளில் புகுந்ததுபோல் புனைந்துரைகள், கற்பனைகள், பொய்கள் சட்டவடிவம் போல் சாயல்கொண்டு நுழைந்து, மார்க்கத்தை அழித்தொழிக்காமல் நிலைபெறச் செய்தனர். முந்தைய தலைமுறையினர்களுக்கு ஹதீதைப் பாதுகாப்பதே அவர்கள் வாழ்க்கையாக அமைந்தது. இந்த நாற்பெரும் முஜ்தஹிதீன்கள், குர்ஆன் ஹதீது இவ்விரண்டையும் ஸஹாபாக்கள் பின்பற்றி வாழ்க்கை நடத்திய விதம், கையாண்ட முறைகள், மார்க்கத்தீர்ப்புகள், இவ்விரண்டிற்கும் அவர்கள் கூறிய விளக்கங்களை ஒன்று திரட்டி குர்ஆன், ஹதீதிலிருந்து சட்டம் எப்படிப் பிறக்கிறது, அதன் வழிமுறை என்ன என்ற பாதை வகுத்த ஒரு தெளிவான வரம்பை-வடிவத்தைத் தந்து விட்டனர். இதனால் குர்ஆன், ஹதீதில் கண்டவுடன் அதன் பொருளைத் தெரிந்து அதற்குசட்டம், செயல் வடிவம் தந்து, புனைந்துரைகளை உற்பத்தி செய்து கண்டவரெல்லாம் குர்ஆன், ஹதீதைக் கொண்டு தான் விளங்கிய விளக்கமே மார்க்கம் என தன் மன ஊசலாட்டத்திற்கு குர்ஆன் ஹதீதின் பெயரைவைத்துக் கூத்தடிக்காமலிருக்க அரும்பாடு பெற்றனர்.

இவர்களைப் பின்பற்றி, புனித இஸ்லாத்தின் கொள்கை கோட்பாடுகளை வகுத்தளித்தவர்கள் தாம் இமாம் மாதுருதீ (ரலி), இமாம் அஷ்அரீ (ரலி) ஆகிய இருவரும். ஒருவன் தன்னை மார்க்கவாதியாக, முழு இறை நம்பிக்கையாளியாகக் கொள்ளமுதல் தேவை இஸ்லாத்தின் கொள்கை கோட்பாடுகளைத் தெரிந்து அதில் புத்தி நிலைபடுவதுதான் என இவ்விருவரும் விவரித்துள்ளனர். இஸ்லாத்தின் மூலாதார தாரக மந்திரமான கலிமா என்பது அல்லாஹ்வையும், அவன் ரஸூலையும் கொண்டு

ஈமான்-கொள்வதுதான். ஆக, அல்லாஹ் என்றால் என்ன, ரஸூல்கள் என்பவர்கள் யார்? இவர்களின் பண்புகள், இவர்களால் பரப்பப்பட்ட மார்க்கம், அதன் அங்கங்கள், அவற்றின் பண்பு அமைப்புஇவற்றைத் தெரிந்து கொள்வதே கலிமாவின் தாத்பரியம் என்பதை அம்மேதைகள் சுட்டிக் காட்டியுள்ளனர் இவ்வாறு மக்கள் தங்களின் ஈமானில் பங்கம் ஏற்படாமலிருக்கவும், கொண்ட ஈமானைத் தெளிவுடனும் உறுதியுடனும் கொண்டு செலுத்தத் தேவையான அனைத்து அறிவுகளையும் வழங்கியுள்ளனர்.

இவ்வாறு முஜ்தஹிதீன்கள், முதகல்லிமீன்கள் என்னும் கொள்கை இமாமகள் யாத்தளித்த சட்டநியதிகளின்படி குர்ஆன், ஹதீதைப் பின்பற்றி ஷரீஅத்தில் அணுவளவேனும்பிறழாது தங்களை அல்லாஹுவுக்கு அர்ப்பணித்ததால், அவனது நேசம் கிடைக்கப் பெற்றவர்கள் தாம் இறைநேசச்செல்வர்கள்என்னும் மஷாயிகுகள், ஆரிபீன்கள், வலிமார்கள். ஆகியோர் மனிதனை மனிதனுக்கி வைப்பதும், மார்க்கப்படி நடந்தால் மாண்புறும் பண்புகளை அடையலாம் என்பதற்குத் தாங்களே சான்று என இஸ்லாத்தின் சின்னமாய்த் திகழ்பவர்கள் தாம் வலிமார்கள். இப்பெரியார்கள் உளத்தூய்மையின் உயர்வால், ரஸூல் (ஸல்) அவர்களின் வாரிசுரிமையை தக்கவைத்துக் கொண்டதை தங்களின் கராமத் என்னும் அற்புதங்களால் உறுதிப்படுத்தி, இஸ்லாம்--அதன் நிர்ணய வரம்பைப் பின்பற்றுதலால்-மனிதனுக்கு வழங்கும் மாண்பு, முஜ்தஹிதீன்களின் வழிகாட்டுதலில் நின்று கொள்வதால் கிடைக்கும் ஈடேற்றம், அசைக்க முடியாத ஈமானினால் கிடைக்கும் பெரும் பேறுகள் போன்ற புனித தத்துவங்களை உலகில் நிலை பெறச் செய்து, இஸ்லாத்தின் வழிமுறை தடம் புரளாமலிருக்க நிலைக்களன்களாய்ச் சமைந்துள்ளனர்.

இவ்வாறு குர்ஆன், ஹதீதை, முஜ்தஹிதீன்கள், முதகல்லிமீன்கள், ஆரிபீன்கள், வலிமார்கள், இமாம்கள், உலமாக்கள் தீனுல் இஸ்லாத்தை உள்ளது உள்ளபடி விளங்கி, வகைப்படுத்தி, இஸ்லாம் ஒரு கட்டுக் கோப்பான வடிவம் பெற்று இறைஞான வழியில் செல்லும் தெய்வீக மார்க்கமாகத் தெளிவுபடுத்தியுள்ளனர். மேலும் குர்ஆனும், ஹதீதும் அவற்றின் ஆணைப்படி வகைப்படுத்தப்பட்ட சட்ட நியதிகளின்படி பின்பற்ற முஜ்தஹிதீன்களால் தெரிவு செய்யப்பட்டுள்ளதால், கடல்போல் விரிந்த கலாஞானமுள்ள குர்ஆன், ஹதீதை பாமர மக்கள் எவ்வித தயக்கம் கொள்ளாமல் பின்பற்ற வழி பிறக்கின்றது. மேலும் நற்பெரும் முஜ்தஹிதீன்களைப் பின்பற்றுவதால் பின்பற்றுவோரின் அறிவுக்கு ஒரு தெளிவு கிடைத்து, தம் குறைமதியால் குர்ஆன் ஹதீதுக்கு அனர்த்தம் செய்து அல்லாஹ்வுடையவும், அவனுடைய ரஸூலுடையவும் கோபப்பார்வைக்கு இலக்காகாமல் காப்பாற்றப்படுகின்றனர். இவ்வாறு மக்களை இறை பொருத்தம் பெற்ற நல்லடியார்களாய் உய்விக்க வந்தது தான் ஸுன்னத் வல் ஜமாஅத்.

எனினும், எல்லோருக்கும் சந்ததி இருப்பதுபோல், ஆரம்பகாலத்தில் தோன்றிய ஹதீது புரட்டர்களின் சந்ததி தொன்று தொட்டு ஷைத்தானின் நேரடிக் கண்காணிப்பில் போற்றி வளர்க்கப்பட்டு, அவ்வப்போது தம் பங்காக இஸ்லாத்துக்கு பங்கம் விளைவிக்க எண்ணி, பங்கப்பட்டுக்கொண்டே வந்துள்ளது. இக்கூட்டத்தினர் எம்பெருமானார் (ஸல்) அவர்கள் காலத்தில் முனாபிக்-நயவஞ்சகர்-உருவத்தில் உருவெடுத்து, படிப்படியாய்ப் பல்கிப்பெருகி, நாற்பெரும் கலீபாக்களின் காலத்தில் இவர்கள் பெருமளவுக்குக் களையெடுக்கப்பட்டு பின்னர் வந்த ஆட்சிக் காலங்களில் கலீபாக்களிடம் தங்களின் செல்வாக்குப் பலிக்கும் அளவு பயன்படுத்தி, இஸ்லாத்தில் ஊடுருவி, அவர்களின் பங்குக்கு இறை முனிவைத் தேடிக் கொண்டனர்.

அந்த முனிவு பெற்ற அறிவிலிகளின் பாரம்பரியத்தில் வந்தவர்கள், அவ்வப்போது தம் மத எதிர்ப்பைக் காண்பித்து, மடிந்து கொண்டே வந்துள்ளனர். அவர்களின் வாரிசுகளில் சிலர் தற்காலத்தில் தோன்றி இஸ்லாத்தைப் பல கோணங்களில் பாழ்படுத்த முயன்று வருகின்றனர். அப் பலகோணங்களில் ஒன்றுதான், "பர்ளுக்குப்பின் துஆ, திக்ரு, தஸ்பீஹ், ஸலவாத் ஓதக்கூடாது" என்னும் கூற்றும். இதன் மூலம் இவர்கள் தம் பாரம்பரியத்துக்கு முகவரியாய் இருப்பதை வெளிப்படுத்திக் கொள்கின்றனர்.

இஸ்லாம்; ஸுன்னத் வல் ஜமாஅத்தின் பாரம்பரியத்திலேயே வந்துள்ள நாம், நமது உயிர் மூச்சான கொள்கை கோட்பாடுகளின் தலையான அங்கமான முஜ்தஹிதீன்களை பின்பற்றுதல் தான். இவ்வாறு பின்பற்றுவது "தக்லீது" என்று அழைக்கப்பெறுகிறது; இந்த தக்லீது தான் பரிபூரண இஸ்லாத்தை நமக்குப் பாகுபாடின்றி அளிக்க வல்ல இறைவனின் உன்னதமான பேரருளாகும். ஸுன்னத் வல் ஜமாஅத்தில் அன்று முதல் இன்று வரை இடையறாது நடந்து வரும் அமல்களில் பர்ளு தொழுகைக்குப்பின் துஆ ஓதுவது. குர்ஆன், ஹதீது, ஸஹாபாக்களின் வழிமுறையின் படி முஜ்தஹிதீன்கள், மஷாயிகுகளின் தீர்ப்பின் படி சட்டவடிவம் பெற்று செயலாற்றப்பட்டு வருகிறது. அன்றியும், எல்லாக்காலத்தவர்களும் எவ்வித மறுப்புமின்றியே ஒன்றுபட்டு இதன் படி அமல் செய்து வந்துள்ளதே இதன் அவசியத்துக்கும், பொருத்தத்துக்கும் மிகப்பெரும் சான்றாய், மறுக்க முடியாத ஆதாரமாய் அமைந்துள்ளது. எனவே, இதை மறுப்பவன் திருந்தாத உள்ளம் கொண்ட, இறைப் பொருத்தமில்லாதவனும் மார்க்க துவேசமுர்கொண்டவனுமாவான். இவன் நேர்வழியைக் கனவிலும் அடைந்து கொள்ள முடியாதவன் தான்.

இவ்வாறு பர்ளுக்குப் பின்னால் துஆ ஓதக்கூடாது என்ற வாதம் வஹ்ஹாபீ ஏஜண்டுகளால் பரத்தப்படுவதுடன்; தற்காலத்தில் சில அரபு நாடுகளில் வேலை செய்யச் சென்று வரும் தமிழ் நாட்டவர்களில் சிலரும்; ஷரீஅத்தின் அடிப்படையை அறியாத சில 'ஆலிம்' என்ற பெயர் தாங்கிகளும், தாங்கள் அங்கு கண்டதைப் பெருமை

இவ்வாறு குர்ஆன், ஹதீதை, முஜ்தஹிதீன்கள், முதகல்லிமீன்கள், ஆரிபீன்கள்,வலிமார்கள், இமாம்கள், உலமாக்கள் தீனுல் இஸ்லாத்தை உள்ளது உள்ளபடி விளங்கி, வகைப்படுத்தி, இஸ்லாம் ஒரு கட்டுக் கோப்பான வடிவம் பெற்று இறைஞான வழியில் செல்லும் தெய்வீக மார்க்கமாகத் தெளிவுபடுத்தியுள்ளனர். மேலும் குர்ஆனும், ஹதீதும் அவற்றின் ஆணைப்படி வகைப்படுத்தப்பட்ட சட்ட நியதிகளின்படி பின்பற்ற முஜ்தஹிதீன்களால் தெரிவு செய்யப்பட்டுள்ளதால், கடல்போல் விரிந்த கலாஞானமுள்ள குர்ஆன், ஹதீதை பாமர மக்கள் எவ்வித தயக்கம் கொள்ளாமல் பின்பற்ற வழி பிறக்கின்றது. மேலும் நற்பெரும் முஜ்தஹிதீன்களைப் பின்பற்றுவதால் பின்பற்றுவோரின் அறிவுக்கு ஒரு தெளிவுகிடைத்து, தம் குறைமதியால் குர்ஆன் ஹதீதுக்கு அனர்த்தம் செய்து அல்லாஹ்வுடையவும், அவனுடைய ரஸூலுடையவும் கோபப்பார்வைக்கு இலக்காகாமல் காப்பாற்றப்படுகின்றனர். இவ்வாறு மக்களை இறை பொருத்தம் பெற்ற நல்லடியார்களாய் உய்விக்க வந்தது தான் ஸுன்னத் வல் ஜமாஅத்.

எனினும், எல்லோருக்கும் சந்ததி இருப்பதுபோல், ஆரம்ப காலத்தில் தோன்றிய ஹதீது புரட்டர்களின் சந்ததி தொன்று தொட்டு ஷைத்தானின் நேரடிக் கண் காணிப்பில் போற்றி வளர்க்கப்பட்டு, அவ்வப்போது தம் பங்காக இஸ்லாத்துக்கு பங்கம் விளைவிக்க எண்ணி, பங்கப்பட்டுக்கொண்டே வந்துள்ளது. இக்கூட்டத்தினர் எம்பெருமானார் (ஸல்) அவர்கள் காலத்தில் முனாபிக்-நயவஞ்சகர்-உருவத்தில் உருவெடுத்து, படிப்படியாய்ப் பல்கிப்பெருகி, நாற்பெரும் கலீபாக்களின் காலத்தில் இவர்கள் பெருமளவுக்குக் களையெடுக்கப்பட்டு பின்னர் வந்த ஆட்சிக் காலங்களில் கலீபாக்களிடம் தங்களின் செல்வாக்குப் பலிக்கும் அளவு பயன்படுத்தி, இஸ்லாத்தில் ஊடுருவி, அவர்களின் பங்குக்கு இறை முனிவைத் தேடிக் கொண்டனர்.

அந்த முனிவு பெற்ற அறிவிலிகளின் பாரம்பரியத்தில் வந்தவர்கள், அவ்வப்போது தம் மத எதிர்ப்பைக் காண்பித்து, மடிந்து கொண்டே வந்துள்ளனர். அவர்களின் வாரிசுகளில் சிலர் தற்காலத்தில் தோன்றி இஸ்லாத்தைப் பல கோணங்களில் பாழ்படுத்த முயன்று வருகின்றனர். அப் பலகோணங்களில் ஒன்றுதான், ''பர்ளுக்குப்பின் துஆ, திக்ரு, தஸ்பீஹ், ஸலவாத் ஓதக்கூடாது'' என்னும் கூற்றும். இதன் மூலம் இவர்கள் தம் பாரம்பரியத்துக்கு முகவரியாய் இருப்பதை வெளிப்படுத்திக் கொள்கின்றனர்.

இஸ்லாம்; ஸுன்னத் வல் ஜமாஅத்தின் பாரம்பரியத்திலேயே வந்துள்ள நாம், நமது உயிர் மூச்சான கொள்கை கோட்பாடுகளின் தலையான அங்கமான முஜ்தஹிதீன்களை பின்பற்றுதல் தான். இவ்வாறு பின்பற்றுவது ''தக்லீது'' என்று அழைக்கப்பெறுகிறது; இந்த தக்லீது தான் பரிபூரண இஸ்லாத்தை நமக்குப் பாகுபாடன்றி அளிக்க வல்ல இறைவனின் உன்னதமான பேரருளாகும். ஸுன்னத் வல் ஜமாஅத்தில் அன்று முதல் இன்று வரை இடையறுது நடந்து வரும் அமல்களில் பர்ளு தொழுகைக்குப்பின் துஆ ஓதுவது. குர்ஆன், ஹதீது, ஸஹாபாக்களின் வழிமுறையின் படி முஜ்தஹிதீன்கள், மஷாயிகுகளின் தீர்ப்பின் படி சட்டவடிவம் பெற்று செயலாற்றப்பட்டு வருகிறது. அன்றியும், எல்லாக்காலத்தவர்களும் எவ்வித மறுப்புமின்றியே ஒன்றுபட்டு இதன் படி அமல் செய்து வந்துள்ளதே இதன் அவசியத்துக்கும், பொருத்தத்துக்கும் மிகப்பெரும் சான்றும், மறுக்க முடியாத ஆதாரமாய் அமைந்துள்ளது. எனவே, இதை மறுப்பவன் திருந்தாத உள்ளம் கொண்ட, இறைப் பொருத்தமில்லாதவனும் மார்க்க துவேசமுள்கொண்டவனுமாவான். இவன் நேர்வழியைக் கனவிலும் அடைந்து கொள்ள முடியாதவன் தான்.

இவ்வாறு பர்ளுக்குப் பின்னால் துஆ ஓதக்கூடாது என்ற வாதம் வஹ்ஹாபீ ஏஜண்டுகளால் பரத்தப்படுவதுடன்; தற்காலத்தில் சில அரபு நாடுகளில் வேலை செய்யச் சென்று வரும் தமிழ் நாட்டவர்களில் சிலரும்; ஷரீஅத்தின் அடிப்படையை அறியாத சில 'ஆலிம்' என்ற பெயர் தாங்கிகளும், தாங்கள் அங்கு கண்டதைப் பெருமை

யாய்ப் பிற்றி அது கூடாது. இது கூடாது என வாதிட்டு, இத்தக்குழப்பத்தைநம்நாட்டில் உண்டாக்கத் துடியாய்த் துடிக்கின்றனர். இந்தக் காலக் கட்டத்தில் பர்ளு தொழு கைக்குப் பின் துஆஓதுவதுமார்க்கத்தில்எப்படி எவ்வாறு எவ்விதமாய் இது கடமையாக்கப்பட்டுள்ளது எனத் தெரிந்து கொள்வது நம் மீது கடமையாகும். மேலும் நாம் செய்யும் அமலைத் தெரிந்து கொண்டு செய்வது அல்லாஹுதஆலாவிடம் அந்த அமல் ஏற்றுக்கொள்ளப் படுவதற்கு உறு துணையாகும்.

மேலும் இது விஷயத்தில் நாம் தெரிந்து கொள்ள வேண்டியது: துஆ என்றால் என்ன? அது ஷரீஅத்தில் வகிக்கும் அங்கம்; அதன் முக்கியத்துவம், துஆவை ஜமாஅத்தாக ஓதுவதின் சிறப்பும், மாண்பும்; துஆ கேட்கக் கூடிய முறைகள்; அதன் ஒழுக்கங்கள்; பர்ளு தொழுகைக்குப் பின் துஆ ஓதுதல் அதைச் சப்தமிட்டு ஓதலாமா: இமாம் துஆ ஓதி மற்றையோர் ஆமீன் கூறிக் கேட்கலாமா? பர்ளுத் தொழுகைப்பின் ஓதுவ தால் அதன்பின் நிறைவேற்றப்படவேண்டிய ஸுன்னத் எந்தஸ்தானத்திலிருக்கும்போன்றவையாகும். இவற்றைத் தெரிந்து கொள்வோமானால் துஆவின் மாண்பை உணர்ந்து, குறிப்பாக பர்ளுத் தொழுகைக்குப்பின் ஓதப் படும் துஆவின் சிறப்பை அறிந்து, அதன் புனிதத்தைப் பெற்றவர்களாகி நம் நாட்ட தேட்டங்கள் நிறைவேற்றப் பட்டு, ஈருலகிலும் இறைவனின் பேரருள் பெற்ற பாக்கிய வான்களாய் மிளிர்வோம்.

எல்லாம் வல்ல அல்லாஹுதஆலா நம்மை, அவனி டம் கேட்கும் துஆ ஒப்புக்கொள்ளக் கூடிய கூட்டத்தார் களில் சேர்த்து அன்னாரின் அரவணைப்பில் இறை சன்னி தானத்தை அடையும் பேறு பெற்றவர்களாய் ஆக்கி அருள்வானாக. ஆமீன்!

இந்நூலின் எழுத்துப் பிரதியை சரிபார்த்து அழகுற மதிப்புரையும் தந்த பன்னூல் ஆசிரியர், மௌலானா M. அப்துல் வாஹ்ஹாப் M. A. B. TH அவர்களுக்கும், இதனை நூலுருவில் தங்கள் கரங்களிலே தந்திருக்கும் சுலைமானிய்யா பப்ளிஷர்ஸாருக்கும் என் மனமார்ந்த நன்றியினை உரித்தாக்குகிறேன்.

**A. முஹம்மது அப்துல் கபூர் ஸயீதீ**

மௌலானா M. அப்துல் வஹ்ஹாப் ஸாஹிப் M.A. B.TH
அவர்கள் வழங்கும்

# மதிப்புரை

பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம்

நஹ்மதுஹு வ நுஸல்லி அலா ரஸூலிஹில் கரீம்

இன்றைய உலக சமுதாயத்தின் ஓரமைப்பு: 'தனி மனிதனால் உருப்படியாக எதையும் சாதிக்க முடியாது. கூட்டு முயற்சியில்தான் அவன் முன்னேற்றம் காண முடியும்' என்று முழங்குகிறது.

பிறிதோர் அமைப்போ: "கூட்டு முயற்சி என்றால் எவரும், எதற்கும் பொறுப்பேற்க மாட்டார்கள். எனவே தனி மனிதனின் முயற்சியில் தான் ஏற்றம் காணமுடியும்" என்று இயம்புகிறது.

மனித முன்னேற்றத்துக்கு இரண்டும் தேவை என்று இஸ்லாம் எடுத்துரைப்பதுடன், அவற்றுக்குரிய வரை முறைகளையும் வகுத்துத்தருகிறது. கூட்டுச் செயல்பாடு— "இஜ்திமாஇய்யத்" என்றும்; தனிச் செயல்முறை- "இன்ஃபிராதிய்யத்" என்றும் கூறப்படும்.

வாழ்க்கையின் ஒவ்வொரு துறையிலும் இவ்விரண்டும் இணைந்திருப்பதைப் பார்க்கிறோம். வணக்க வழிபாடு களுக்கும் இது பொருந்தும். கடமையாக்கப்பட்ட தொழுகை வணக்க வழிபாடுகளில் தலையாயது. இது கூட் டாக-ஜமா அத்தாக--நிறைவேற்றப்பட்டவுடன், இதனை இமாமாக முன் நின்று நடத்துபவர் துஆ ஓதுவதும், பின் நின்று தொழுபவர்கள் "ஆமீன்" கூறுவதும் மார்க்கத்தில் ஆகுமாக்கப்பட்டு, நம்மால் அனுஷ்டிக்கப் பட்டு வரும் வழிமுறையாகும்.

அண்மைக் காலத்தில் இஸ்லாமிய சமூகத்தில் ஒரு சிலர் பன்னெடுங்காலமாக நாம் பின்பற்றிவரும் மார்க்க வழிபாடுகளையெல்லாம் தவறு என்று கூறி, அதற்கென்று பிழைபட்ட சில ஆதாரங்களையும் கவர்ச்சிகரமாக

விளக்கி, நம்மிடையே பிளவுண்டாக்க முற்பட்டுள்ளனர். இவர்களிடம் நாம் வாதம் செய்ய முற்படுவது தேவையில்லாதது. இருப்பினும் இவர்கள் தம் போலி ஆதாரங்களை —அவை தர்க்க ரீதியானவை, அறிவிற்குப் பொருந்துபவையென்று பலவாறுனவாதங்களாகச் சிதறச்செய்து நம் இளைஞர்களில் சிலரை திசை திருப்ப முயன்று வருகின்றனர்.

இவ்வாறுதான் அன்று ஃதவ்ரு குகையில், நபிகள் பெருமானார் (ஸல்) அவர்களும், ஹலரத் ஸித்தீகுல் அக்பர் (ரலி) அவர்களும், உள்ளேயிருந்த போது, வெளியே நின்று பார்த்த குறைஷிகள், ''புரு கூடு கட்டியிருக்கின்றது; சிலந்தி வலை பின்னியிருக்கிறது, எனவே யாரும் உள்ளே போயிருக்க முடியாது'' என்ற தங்களுடைய சிற்றறிவுக்கு கொத்த தர்க்க ரீதியான வாதங்களால், திசை திருப்பப்பட்டுத் திரும்பினர். புருவின் இயல்பையும், சிலந்திப் பூச்சியின் தன்மையையும் உள்ளபடி அறிந்துகொள்ளக்கூடிய நிலையை அவர்களுடைய சிற்றறிவு அவர்களுக்குக் கொடுக்கவில்லை. அந்தச் சிற்றறிவுப் பற்றி அவர்கள் கொண்டிருந்த மமதையினுலேயே அவர்களைத் தோல்வியடையச் செய்ய வேண்டுமென்பது அல்லாஹ்வின் நாட்டம் போலும்.

''தொழ வைக்கும் இமாமுக்கு என்னுடைய தேவைகளைப் பற்றி என்ன தெரியும்? அவர் எப்படி தொழுகை முடிந்தவுடன் எல்லோருக்காகவும் பொதுவாக துஆச் செய்யமுடியும்?''என்பது இவர்கள் நம்முடைய இளைஞர்கள் சிலரைத் தூண்டிவிட்டு கேட்கும் கேள்விகளில் ஒன்ருகும்.

பொதுவான துஆவுடன்தான் கிரஅத் முதலே துவங்குகிறது. ''இய்யாகநஃபுது'' ''உன்னையே நாங்கள் வணங்கிருேம்'' ''இய்யாக நஸ்தஈன்'' உன்னிடமேநாங்கள்உதவிதேடுகிருேம், ''இஹ்திநஸ்ஸிராதல் முஸ்தகீம்'' ''எங்களை நேர்வழியில்செலுத்துவாயாக'' என்றுநம்அனைவர் சார்பிலும் ஓதும் இமாம் அவர்கள் நாம் நேர்வழியில் செலுத்தப்பட வேண்டும் என்ற அவசியத்தை—தேவையை—நாம் சார்பில் அல்லாஹு ஸுப்ஹானஹு வதஆலாவின் முன் சமர்ப்பிக்கிருர்.

எனவே, அதே இமாம் தொழுகை முடிந்ததும், துஆவுடன் தலையாய இந்த வணக்கத்தை நிறைவு செய்வது அறிவுக்கு முற்றும் பொருத்தம்தான்.

அன்றியும் இறைவன் தன்னிடம் துஆக் கேட்கச் சொல்லும் திருவசனங்களெல்லாம், "நீங்கள் தனிப்பட்டுக் கேளுங்கள்," என்ற ரீதியிலா அமைந்திருக்கின்றன?

ஆனால் இதையெல்லாம் குழப்பவாதிகள் காதில் போட்டுக்கொள்ள மாட்டார்கள்.

சமீப காலத்தில் அவர்களின் வாதங்களைச் சிறிது ஊன்றிப் பார்த்து, அவற்றின் மூலமாக அவர்கள் நம் இளைஞர்கள் சிலரின் சிந்தனையை எப்படி மாசுபடுத்த முற்படுகிறார்கள் என்பதை முனைந்தறிய வேண்டிய நிலை எனக்கு ஏற்பட்டது. அப்பொழுது தான் அவர்கள் குர்ஆனின் ஆயத்களையும், ஹதீதுகளையும் எப்படித் திரித்தும், புரட்டியும், அரை குறையாகவும் கூறுகிறார்கள் என்பதைக் காண முடிந்தது.

மௌலானா ஷப்பீர் அஹ்மது உத்மானீ (ரஹ்) அவர்களுடையவும், மௌலானா அப்துல் ஹை லக்னவீ (ரஹ்) அவர்களுடையவும் சில கருத்துகளை இவர்கள் அவ்வப்போது தங்கள் போலிவாதங்களுக்காகப் பயன் படுத்துவதுண்டு; ஆனால் அவ்விருவருமே துஆ ஓதும் இவ் விஷயத்தில் ஸுன்னத் வல் ஜமாஅத்தின் கருத்தை ஏற்றுள்ளார்கள் என்பதை இந்நூலாசிரியர் மௌலவீ A. முஹம்மது அப்துல் கபூர் ஸயீதீ அவர்கள் ஆணித்தரமாக விளக்கியுள்ளார்கள்.

நான்கு மத்ஹபுகளும் ஏற்று முழுமையான ஒரு தீர்ப்பு நமக்குக் கிடைத்திருக்கும்போது இதுபற்றி விவாதமே தேவையில்லைதான். ஏனெனின் நான்கு மத்ஹபைகளையும் நிறுவிய நல்லவர்களுக்கு—வல்லவர்களுக்கு இந்த நவீன குழப்பவாதிகளை அறிவிலோ, ஆற்றலிலோ, தக்வாவிலோ (ஒழுக்க நெறியிலோ) சமமானவர்களாக எவரும் கருதவில்லை; எனினும் நம்முடைய இளைஞர்கள் வழிதவறிவிடாமல் இருப்பதற்காக இந்நூல் அவசியமென எண்ணுகிறேன்.

நூலாசிரியர் மௌலவீ A. முஹம்மது அப்துல் கபூர் ஸயீதீ அவர்களின் அறிவுத்துலக்கமும், ஆராய்ச்சித்தெளிவும், எழுத்தாற்றலும் புத்தகத்தின் ஒவ்வொரு பக்கத்திலும் நன்கு புலப்படுகிறது. தக்க தருணத்தில், இம்மார்க்க அறிஞர் இயற்றித் தந்திருக்கும் இம்மகத்தான நூலுக்கு, இஸ்லாமிய சமுதாயம் சிறந்த வரவேற்பினை நல்கி, இது போன்ற சிறந்த நூல்களை மேலும், மேலும் ஆக்கித் தருவதற்கு அன்னாருக்கு ஆக்கமும், ஊக்கமும் தொடர்ந்து தரும்—இன்ஷா அல்லாஹ்—என்ற உறுதியுடன் கூறி அமைகிறேன்.

வ ஆகிரு தஃவானா அனில் ஹம்து லில்லாஹி ரப்பில் ஆலமீன்.

8-12-1409
7-7-1989

அப்துல் வஹ்ஹாப்

بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

# 1. துஆவும் இறைவழிபாடாகும்!

முதலில் துஆ என்பதற்குப் பொருளும், இது சம்பந்தமான சட்ட விளக்கங்களும் பற்றி நினைவுபடுத்திக் கொள்வோம்.

துஆ என்பது அல்லாஹுதஆலாவிடம் அடியான் உதவி கேட்டலும், அவனிடமே உபகாரம் பெறத் தேடுதலுமாகும். அதன் அந்தரங்கம், அடியான் தன் ஏழ்மையை, தேவையை தன் எஜமானன அல்லாஹுதஆலாவிடம் வெளிப்படுத்துதல்; அவனைத் தவிர இவ்விஷயத்தில் யாருக்கும் சக்தியும் பலமுமில்லை என்பதில் தெளிவாயிருப்பது; இதுவே இறை ஒருவனுக்கே அடிமையாய் இருத்தல் எனும் தத்துவத்தின் அடையாளமாகும். இன்னும் 'துஆ' என்றால் அல்லாஹுதஆலாவை புகழ்தல், துதித்தல், அவனது கொடை, தயாள குணத்தைப் போற்றுதலுமாகும். இதல்லாமல் அடியார்களுக்கு அவர்களின் தராதரத்தை கவனியாது அள்ளி வழங்கி அருள்பாலிப்போன் என்பன போன்ற கருத்துகளையும் பொதியும். —(இத்திஹாஃப் பக்கம் 29 பாகம் 5)

அல்லாஹுதஆலா ஒன்றை ஏவினால் அது நம்மீது ஏவல் விதிகளின் வகைப்படி பர்ளு, வாஜிப், ஸுன்னத், முஸ்தஹப்பு என வகைப்படுத்தப்பட்டு, அமலாக்கப் படும். அவனது ஏவலுக்கு அடிபணிவது இபாதத்—

ப—2

வணக்கமாகும். குர்ஆன் ஷரீபில் பல இடங்களில் துஆ கேட்கச் சொல்லி இருப்பதும், நபிமார்களைப் பின்பற்றச் சொல்லி அவர்களின் நடத்தை அனைத்தும் அல்லாஹு தஆலாவிடம் இறைஞ்சுதலையே தலையான கர்மமாய் கொண்டுள்ளதையும் தெளிவாய்க் காணலாம்.

1. "என்னிடம் துஆக் கேளுங்கள் நான் பதிலிறுக்கிறேன்.

2. என்னைப் பற்றி உம்மிடம் என் அடியான் கேட்பானாகில் நிச்சயமாய் நான் சமீபத்திலுள்ளேன்; அழைப்பவன் என்னை அழைத்தால் அவன் அழைப்புக்கு பதில் சொல்கிறேன்.

3. அவனை பக்தியுடனும், அச்சப்பாட்டுடனும் அழைப்பீர்களாக;(துஆச் செய்வீர்களாக) ஏனெனில் எனது கிருபை நல்லோர்களை சமீபித்துள்ளது.

4. எனது வணக்கத்தை விட்டும் (பராமுகமாய்) பெருமையடித்துத் திரிபவர்கள் தாழ்ந்தவர்களாய் நரகில் புகுவார்கள்." என்பன இதுபற்றிய இறை வசனங்களின் கருத்துகளாகும்.

இன்னும் பல வசனங்களில் தன்னிடம் துஆ கேட்கும் படித் தன் அடியார்களை, ஏவி அவனது கொடைப் பண்பை முழுக்க முழுக்க அனுபவித்துக் கொள்ள இடம் கொடுக்கிறான்.

மேற்கண்ட நான்காம் வசனத்தில் கூறப்பட்ட, ''எனது வணக்கத்தை விட்டு'' என்று வரும் பதத்திற்கு திருமறை விரிவுரையாளர்கள் அனைவரும்—'என்னிடம் துஆக் கேட்டல்' என்று ஒட்டு மொத்தமாய் கருத்தொருமித்துக் கூறுகின்றனர் என்பதாய் இமாம் ஷாஹ்

வலியுல்லாஹித் திஹ்லவீ அவர்கள் தங்களது மிஷ்காத் தின் விரிவுரை லம்ஆத்தில் கூறுகிறுர்கள்.

—(மிஷ்காத்தின் ஓரக்குறிப்பு பக்கம் 94 எண் 9
இத்திஹாஃப் பக்கம் 28 பாகம் 5)

ஆக அல்லாஹுதஆலாவே தன்னிடம் துஆக் கேட்பதை இபாதத்—வணக்கம் என விவரித்துள்ளான் என்ருல், இதுவும் இறைவழிபாடுதான் என்பதற்கு வேறெந்த விளக்கமும் தேவையில்லை.

ரஸூல் (ஸல்) அவர்களும் துஆ என்பது வணக்கம் தான் எனக் கூறியுள்ளார்கள்.

(பதிவு: அஹமது, திர்மதீ, அபூதாவூது, நஸஈ,
இப்னு மாஜா.
அறிவிப்பவர் : நுஃமானுப்னு பஷீர் (ரலி)
மிஷ்காத் ஜாமிஉத் துஆ பாடம் பக்கம் 194)

'துஆ' இபாதத்தின் மூளை—அதாவது வணக்கத்தின் அசலே அல்லாஹுதஆலாவிடம் துஆக் கேட்பதுதான் என்று பெருமானுர் (ஸல்) அவர்கள் கூறுகிறுர்கள். மேலும் ரஸூல் (ஸல்) அவர்கள் ''யார் அல்லாஹுதஆலாவிடம் துஆக் கேட்கவில்லையோ, அவன் அல்லாஹுதஆலாவுடன் பலப்பரீட்சை செய்பவன்'' என்று எச்சரித்து துஆக் கேட்பதின் முக்கியத்துவத்தையும், அதை நிராகரிப்பதின் ஆபத்தையும் ஒன்று சேர அறிவித்துள்ளனர்.

'துஆ' என்பது எப்போது இபாதத் ஆகிவிட்டதோ அப்போதே அல்லாஹுதஆலா நாம் துஆச் செய்கின்ருேமா, இல்லையா என்பதைப் பார்த்து நமது நடவடிக்கையின்படி நமக்குத் தீர்ப்புச் செய்ய முடிவு செய்துள்ளான் என்பதை ரஸூல் (ஸல்) அவர்கள்: 'யார் அல்லாஹுதஆலாவிடம் துஆக் கேட்கவில்லையோ அவன் மேல் அல்லாஹ் கோபமடைகிருன்', என்று 'துஆ'க்

கேட்காததை தன்னை வணங்காத குற்றமாய் அல்லாஹ் பாவிக்கிறான் என்பதை விளக்கியுள்ளார்கள்.

—(இத்திஹாஃப் பக்கம் 30 பாகம் 5)

ரஸூல் (ஸல்) அவர்களே இபாதத் என விளக்கிய பின், இதன் முக்கியத்துவத்தைப் பற்றி விவரிக்க அவசியமில்லை. இபாதத் என்றால் கேட்பவன் எல்லா நினைப்புகளையும் புறக்கணித்து, அல்லாஹு தஆலாவே நம் தேவையைத் தீர்க்க வல்லவன் என மனஉறுதி கொண்டு, அவன் பக்கமே சார்ந்து ஆதரவையும், பயத்தையும் அவனல்லாத யாரிடமும் வைக்காமல் இருக்க வேண்டும். இதைத்தான் அல்லாஹுதஆலா ''என்னிடம் துஆக் கேளுங்கள்,'' என அடியார்களின் நிலை எப்படி இருக்க வேண்டுமென்சச் சுட்டியுள்ளான்.

'இபாதத்' என்றாகிவிட்டால் அடியார்களுக்கு ஏவப்பட்ட காரியமாகி விடுகின்றது. இதை அடியான் (தூய உள்ளத்துடன்) செய்ய வேண்டும். செய்தவுடன் இது இபாதத்தாக ஏற்றுக் கொள்ளப்படும் என்பதே இதன் தாத்பரியம்! 'இபாதத்' என்றாகி விட்டால், அதன் நிபந்தனையின்படி கூலி நிர்ணயிக்கப்படும். சூழ்நிலைகளுக்கேற்ப கேட்கும் விதமும் வகைப்படுத்தப்பட்டிருக்கும். துஆ இவ்வாறுள்ளதால் மிகவும் பூர்த்தியான இபாதத் ஆகிவிடுகின்றது. —(இத்திஹாஃப் பக்கம் 29 பாகம் 5)

மேற்கூறப்பட்டது 'துஆ' என்பதற்கு இபாதத்— வணக்கம் என்று விளங்கப்பட்டதின் கருத்து-'இபாதத்' என்பது அல்லாஹு தஆலாவிற்கு மட்டும் செய்யும் வழிபாடாகும். 'துஆ' என்பதற்கு தாஅத்—வழிபடுதல் என்று ஒரு விளக்கம் ஷரீஅத்தில் கொடுக்கப்பட்டுள்ளது. (இத்திஹாஃப் பக் 28 பாகம் 5) தாஅத் என்பது அல்லாஹ், ரஸூல், பெரியோர்களுக்கு வழிப்படுதலுக்குக் கூறப்படும். இதன்படி துஆ என்பதற்கு அல்லாஹு தஆலா அல்லாத மற்றவர்களி(நபிமார்கள், ஸஹாபாக்கள், வலிமார்கள், பெரியோர்கள், ஸாலிஹீன்கள்)

டம் சகல உதவிகளேயும் தேடலாம்; அதாவது அவர்களே வஸீலாவாக வைத்து அல்லாஹு தஆலாவிடம் கேட்க லாம் என்னும் கருத்துக்கும் இடம் தரும்.

மேலும், ரஸூல் (ஸல்) அவர்கள்: 'அல்லாஹு தஆலாவிடம் அவனது கொடை தயாளத்திலிருந்து கேளுங்கள், இன்னும் அவன் தன்னிடம் கேட்பதைப் பிரி யம் வைக்கிறுன், மேலும் இபாதத்களில் மிகச் சிறந்தது 'இன்திலாருல் புரஜ்' — காலதாமதத்துடன் துஆ ஏற்கப் படுவதை எதிர்பார்த்துக் கொண்டிருப்பதுதான் என்று ரைத்துள்ளார்கள்.

(பதிவு: பைஹகீ, திர்மதீ;
அறிவிப்பவர்: இப்னு மஸ்ஊது (ரலி)

நமது துஆவை உடனுக்குடன் ஏற்று அல்லாஹு தஆலா நம் தேவையைத் தீர்த்து விடாமல் சற்று கால தாமதத்துடன் நம் நாட்டத்தைத் தீர்த்து வைக்கும்படி நாமிருப்பதே இபாதத்தில் மிகச் சிறந்தது. ஏனெனில் எவ்வளவு காலதாமதமாகின்றதோ அவ்வளவு காலம் அவனிடம் பயபக்தியுடனும், தாழ்மையுடன் கவலே யுடன் கூடிய பணிவுடனும் மேலும் அவன் பிரியப்படும் இபாதத்தையும் செய்து கொண்டு, தாமதமாக ஆக அதிகப்படுத்திக் கொண்டே செல்வோம். இந்த நல்ல நஸீப்-இபாதத்-அல்லாஹு தஆலா தாமதம் செய்வ தால்தான் நம்மிடமிருந்து உண்டாகின்றது;

(இத்திகாஃப் பக்கம் 30 பாகம் 5)

எனவே நாம் எப்போதும் துஆவில் — இபாதத்தில் — இருப்பதே இறைவனுக்குப் பிரியமான ஒன்றுகும்.

ஆக, அல்லாஹு தஆலாவிடம் முறையிடுதல் அனேத்தும் துஆ என்ற தலேப்பின் கீழ் ஒன்று சேருகின் றன; ஷரீஅத்தின் முழுக் கட்டுக்கோப்பான நடவடிக் கைகள் அனேத்தும் துஆக் கேட்டல், அதற்கு நம்மைத் தயார் படுத்திக் கொள்வதிலேயே நிலேப்படுத்தப்பட்டுள்

ளது. ஈமான், தொழுகை, ஜகாத், நோன்பு, ஹஜ் போன்றவையும் இவையல்லா அமல்கள் அனைத்தும் இறையண்டுதலைத் தரும் அமல்களாவதால் அனைத்தும் துஆவில் கட்டுப்பட்டவையாகின்றன. இவையல்லாத ஏனைய அமல்களும் துஆ இல்லாமல் முதிர்வதில்லை என்பதே அவை அமல்கள் என்பதற்குச் சான்றாகும்.

இவ்வளவு உயர்வுள்ள துஆ—ஷரீஅத்தின் எல்லாப் படித்தரங்களிலும் நீக்கமற நிறைந்துள்ள ஒன்றை-அதுவும் அல்லாஹ், ரஸூல் (ஸல்) தெளிவாக ஏவியுள்ள அமலைச் செய்வதற்கு இடம், பொருள், ஏவல் பார்க்க வேண்டிய அவசியமில்லை. ஒட்டு மொத்தமாய் எந்த அமலையும் கண்மூடித்தனமாய்ச் செய்யும்படிச் சொல்வது ஷரீஅத்தின் பாற்பட்டதல்ல. எனவே அமல் என்றால் அதற்கு வகுக்கப்பட்டுள்ள நிய்யத், ஒழுங்கு முறைப்படி நிறைவேற்றப்படுவதாகும். ஆகையால் துஆக் கேட்கும் முறை, ஓதும் இடம், காலம், சூழ்நிலை, சந்தர்ப்பம் அனைத்தும் தெளிவுற வகுக்கப்பட்டுத் தடையின்றிச் செயல்பட்டு வருகின்றது. அதில் ஒன்றுதான் பர்ளுத் தொழுகைக்குப் பின் துஆ ஓதுவது; இதற்கு தெளிவான ஆதாரங்கள் குர்ஆன் ஹதீதின் மூலம் முஜ்தஹிதீன்கள், மஷாயிகுகளால் உறுதிப்படுத்தப்பட்டு, பேணுதல் பூணிப்புடன் ஓதப்படுகின்றன. இந்த அமல் தொன்று தொட்டு இடையறாது செய்யப்பட்டு வருகின்றது. 'இது கூடுமா, ஆதாரமுள்ளதா?' என வாதிப்பவர்கள் மார்க்கத்தில் அவர்கள் எவ்வளவு தூரம் ஒதுங்கிப் போய்விட்டனர் என்பதையே புலப்படுத்துகின்றனர். தீனுல் இஸ்லாத்தை விட்டு அவர்கள் எங்கோ போய் விட்ட அவலநிலையை அவர்களுடைய வாதங்களே வெளிக்காட்டும்.

எனவே மேற்கண்ட ஆதாரங்களிலிருந்து 'துஆ' என்பது தனிப்பட்ட அமல், இபாதத் ஆகும்; அது நமக்கு ஷரஹாக்கப்பட்டது என்றும் உறுதியாகும். நாம் துஆக் கேட்பவர்களாயிருந்தால்தான், நம்மை உண்மையிலேயே ஈமானுடையவர்கள் எனச் சொல்ல முடியும்.

துஆ என்பது நம்மை எப்போதும் அல்லாஹுதஆலா வின் எஜமானத்துவத்தையும் நமது அடிமைத் தனத்தையும் சிந்திக்க செய்து கொண்டிருக்கத் தூண்டுவதாயும், ஈமானின் நீங்காத ஓர் எண்ணத்தை நம்மில் உதிக்கச் செய்து, நம்மில் உளத்தூய்மையான முஃமினுக நம்மை அல்லாஹுதஆலாவிடத்தில் எடுத்துக் காண்பிப்பதாயுமுள்ளது. இவ்வளவு உன்னதமான இபாதத்தை அது ஏற்கப்படும் நேரங்களை கவனித்துச் செய்தால் அல்லாஹு தஆலா அதனை ஏற்று நம் நாட்டங்களைப் பூர்த்தி செய்வான். அப்படி ஏற்கக் கூடிய நேரங்களில் ஒன்றுதான்: பர்ளுத் தொழுகை நிறைவேற்றிய பின்னுள்ள நேரம். இந்த நேரத்தில் துஆக் கேட்பது சகல இபாதத்களையும் ஒருங்கிணைத்து இறைப்பொருத்தம் பெற்றுத்தரவல்ல செயலாகும்.



# 2. துஆவின் அனுஷ்டான முறைகள்

துஆ தனிப்பட்ட ஓர் இபாதத்தாயிருப்பதால் அதற்கென தனிச்சட்டதிட்டங்களும், வரைமுறைகளும் உள்ளன. துஆவை எந்த இடத்தில் நிறைவேற்றினுலும் இதற்குண்டான நிபந்தனை, விதிமுறை, ஒழுங்கு முறைகளின் படியே அமல் நடத்தவேண்டும். இல்லையெனில் தனிப்பட்ட இபாதத்தான துஆவிற்கு உரிய இடம் தரப்படாமல், அதன் பயன் கிடைக்கப் பெருமல் போவதுடன், அதை அவமதித்த குற்றத்திற்கும் ஆளாக நேரிடுமாகையால், அதற்குண்டான அனுஷ்டான வழிமுறைகளைத் தெரிந்து கொள்வது மிகமிக அவசியம்.

அவையாவன: துஆக் கேட்பவர் துப்புரவான ஆடையுடன் தூய்மையாய் கிப்லாவை முன்னேக்கி, இரண்டு கைகளையும் உள்ளங்கை வானத்தை நோக்கி இருக்கும்படியும், இரண்டு கைகளுக்கும் மத்தியில் சற்று

இடைவெளியிருக்கும் படியும் நெஞ்சுக்கு நேராய் வைத்து துஆக் கேட்க வேண்டும். துஆக் கேட்கத் துவங்கும் முன் அல்லாஹு தஆலாவைப் புகழ்ந்து, புகழை அவனின் திருநாமங்களைக் கொண்டு முடித்து, அதன்பின் எம்பெருமானார் முஹம்மதுர் ரஸூல் (ஸல்) அவர்கள் மீது ஸலவாத் சொல்லி ஆரம்பிக்கவேண்டும். துஆவை ஸலவாத்தைக் கொண்டே முடிக்க வேண்டும். அதன்பின் இரண்டு கைகளையும் முகத்தில் தடவிக்கொள்ளவேண்டும். இதுவே துஆ ஓதும்போது அனுஷ்டிக்க வேண்டிய பொதுவான முறை. மேலும் துஆவின் ஒழுக்கங்கள் பற்றிய தலைப்பிலும் விரிவாய் காணலாம்.

மேற்கண்டவாறு வரையறுக்கப்பட்ட துஆவின் அனுஷ்டான முறை ஷரஹில் தெளிவு செய்யப்பட்டிருப்பதை ஆதாரங்களுடன் தெரிந்துகொள்வோம்:

''நீங்கள் அல்லாஹு தஆலாவிடம் துஆக் கேட்பீர்களாயின் உங்கள் உள்ளங்கைகளைக் கொண்டு கேளுங்கள். அதன் வெளிப்புறத்தைக் (புறங்கையைக்)கொண்டு கேட்காதீர்கள்'' என ரஸூல் (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

(பதிவு: அபூதாவூது
அறிவிப்பவர்: மாலிகுப்னு யஸார் (ரலி)]

இதே ஹதீதை இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்து; ''உங்களது துஆவை முடித்தீர்களேயானால், உள்ளங்கைகளை உங்கள் முகத்தில் தடவிக்கொள்ளுங்கள்'' எனக் கூறியுள்ளார்கள்.

[பதிவு: அபூதாவூது; மிஷ்காத் 195
புகாரீயின் விரிவுரை ஐனீ பக்கம் 543 பாகம் 10]

ரஸூல் (ஸல்) அவர்கள் துஆக் கேட்க கையை உயர்த்துவார்களேயானால் அவற்றினால் தங்களின் முகத்தை தடவுவதல்லாமல் கீழே விடமாட்டார்கள்.

[பதிவு: திர்மதீ: அறிவிப்பவர்: உமர் (ரலி)
இத்திஹாஃப் பக்கம் 35 பாகம் 5
மிஷ்காத் பக்கம் 195]

ரஸூல் (ஸல்) அவர்கள் முகத்தில் கையைத் தடவச் சொன்னதின் தாத்பரியமாவது: 'முகம் என்பது உடல் உறுப்புகளில் மிகவும் சிறந்தது; கையை உயர்த்தி துஆக் கேட்ட பின் அல்லாஹு தஆலா துஆவை ஏற்றுக் கொண்டு அவன் அருட்கொடைகள் நம் கையில் இறங்கியுள்ளது என கருத்தில் கொண்டு அந்த பரக்கத்தை நமது உடம்பின் உயர்தரமான உறுப்பு பெறும் பொருட்டு (உடல் அனைத்தும் பெற்றதாய்) செய்வதாகும்', என இமாம் ஷாஹ் வலியுல்லாஹில் தெஹ்லவீ (ரஹ்) தங்களது மிஷ்காத்தின் விரிவுரை லம்ஆத்தில் கூறுவதாய் மிஷ்காத் ஓரக்குறிப்பு விரிவுரை (ஹாஷியா) பக்கம் 195 குறிப்பிடுகின்றது.

ரஸூல் (ஸல்) அவர்கள் தங்களின் கரங்களை உயர்த்தி அவற்றைத்தங்களது தோள்பட்டைக்குநேராக வைத்து துஆக் கேட்பவர்களாயிருந்தார்கள்.

[அறிவிப்பவர்: ஸஹ்றுப்னு ஸஃது (ரலி)]

ரஸூல் (ஸல்) அவர்கள் துஆ கேட்பார்களாயின் இரு கரங்களையும் உயர்த்தி, அவற்றைத் தம் முகத்தில் தடவிக் கொள்வார்கள்.

[அறிவிப்பவர்: ஸாயிப்னு யஜீது (ரலி)
பதிவு: பைஹகியின் தஃவாத்துல் கபீர்.
மிஷ்காத் 199-ம் பக்கம்]

குர்ஆன் ஷரீபின் பதினெட்டாம் ஜுஸ்வின் முதல் பத்து ஆயத்துகள் இறக்கப்பட்டவுடன் ரஸூல் (ஸல்) அவர்கள் கிப்லாவை முன்னோக்கித் தம் இரண்டு கைகளையும் உயர்த்தி துஆச் செய்ததைச் உமர் (ரலி) அறிவிக்கிறார்கள்.

[பதிவு: அஹமது, திர்மதீ
மிஷ்காத் பக்கம் 219]

ரஸூல் (ஸல்) அவர்கள் ஜன்னத்துல் பகீயில் துஆச் செய்தபோது, கையை உயர்த்தி மூன்று முறை கேட்டதாக இமாம் முஸ்லிம் அறிவிக்கிறார்கள்.

[அல்பஸாயிர் பக்கம் 124]

துஆக் கேட்கும் போது உங்கள் கைகளை தோள் பட்டைக்கு நேராக வைத்துக் கொள்ளுங்கள்.

[பதிவு: அபூதாவூது அறிவிப்பவர்: இக்ரிமா (ரலி)]

இப்னு உமர் (ரலி) அவர்கள் நெஞ்சைக் காட்டி இதற்கு மேல் அதிகமாய் துஆவில் கையைத் தூக்குவது பித்அத் என்று கூறியுள்ளார்கள். [பதிவு: அஹமது]

மேலும், துஆவில் ஒன்றையே அல்லாஹு தஆலா விடம் மடக்கி மடக்கிக் கேட்பதும் துஆவின் அனுஷ் டானங்களில் ஒன்றாகும். இமாம் புகாரீ (ரஹ்) அவர்கள் துஆவைத் திரும்ப திரும்பகேட்கும் பாடம் என்றே ஒரு தனித் தலைப்பிட்டு ஹதீது பதிவு செய்துள்ளனர்.

துஆவைத் திரும்பத் திரும்பக் கேட்க வேண்டும் அதில் குறைவானது மூன்று தடவை என்று எம்பெரு மானார் அறிவித்துள்ளதாய் 'ஹிஸ்னுல் ஹஸீனில்' வருகின்றது.

திரும்பத் திரும்பக் கேட்பதையே அல்லாஹு தஆலா பிரியப்படுகிறான் என்ற ஹதீது கன்ஜுல் இபாது பக்கம் 24-ல் வருகின்றது.

துஆக் கேட்கும்போது இரண்டு கைகளையும் நெஞ் சுக்கு நேராக உயர்த்தி, உள்ளங்கை வானத்தை நோக்கி இருக்கவேண்டும். ஏனெனில் வானம் தான் துஆ விற்கு கிப்லா. இரண்டு கைகளுக்கு மிடையில் இடை வெளி இருக்கவேண்டும். துஆ முடிந்தபின் கைகளை முகத் தில் தடவிக் கொள்வது ஸுன்னத்தாகும்.

[துர்ருல் முக்தார்: (பாடம்: ஸிபத்துஸ் ஸலாத்) பக்கம் 77 பாகம் 1; தஹ்தாவீ: பக்கம் 224 பாகம் 1; ரத்து பக்கம் 356 பாகம் 1]

அல்லாஹு தஆலா எந்த திசையின் பக்கமும் சுட் டிப்படாதவன் என்று ஈமான்கொண்டுள்ளபோது துஆக்

கேட்கும் பொழுது கைகளை வானத்தை நோக்கி ஏன் நாம் உயர்த்த வேண்டும் என வினவப்பட்டால் அதற்குத் தெளிவு.

1. இமாம் தர்சூசீ (ரஹ்) சொல்கிறார்கள்: தொழுகையில் கிப்லாவை முன்னோக்குவது போல், ஸுஜூதில் நெற்றியை பூமியில் வைப்பது போல், துஆவில் கையை வானத்தை நோக்கி உயர்த்தப்படுகிறது. ஏனெனில் வானம்வணக்கத்தின் ஸ்தலமாய் இருப்பதால்தான்.

2. இன்னும் வானத்திலிருந்தே ரிஸ்கும், வஹீயும் இறங்குகின்றன. மேலும் வானத்திலிருந்தே மழை பெய்து பயிரினங்கள் வளர்வதால் இது ரஹ்மத்-பரக்கத்தின் இடமாகவும் அமைகின்றது. இதுவே மலக்குகளின் உயர்ந்த ஸ்தானம் உடைய 'மாஉல் அஃலா' இருக்கும் இடமாகின்றது. ஒரு விஷயத்தில் அல்லாஹு தஆலா செய்யும் முடிவை முதலில் இவர்களுக்கு அறிவித்து, இவர்கள் உலகில் வாழ்பவர் (நெஞ்சங்)களில் போடுகிறார்கள். இதேபோல் நாம் செய்யும் அமல்கள் வானத்தின் பாலே உயர்த்தப்படுகின்றன. நபிமார்கள் பலர் வானத்தில் தான் உள்ளனர். மானிட நாட்டங்களில் முடிவானதான சுவர்க்கம் வானத்திலேயே உள்ளது. இவ்வாறுள்ள தன்மைகள் யாவும் வானத்திலேயே நிலை நிறுத்தப்பட்டுள்ளமையாலும், விதி மானிட கோடிகளின் நிகழ்ச்சிகளின் மூலம் ஆகின்ற படியாலும் அனைவரின் நோக்கமும் வானத்தை நோக்கியே உள்ளன.

வஜீர் முஹல்லபீ என்பவர்களின் வீட்டில் நீதிபதி இப்னு பர்ஆ ஒரு நாள் தொழுது கொண்டிருந்தார்கள். அவர்கள் தொழுவதை அபூ இஸ்ஹாக் ஸாபீ என்பவர்கள் கவனித்துக் கொண்டிருந்தார்கள். இதைக் கண்ணுற்ற இப்னு பர்ஆ அவர்கள் அபூ இஸ்ஹாக்கை நோக்கி, ''என்னை ஏன் கவனித்துக் கொண்டிருக்கிறீர்கள்?'' என வினவ, அபூ இஸ்ஹாக் ஸாபீ கூறினார்கள்: ''ஸாபீயின் சகோதரரே! எனக்குத் தெளிவான ஷரஹை பிரியப்படும்படி செய்தீர்கள். எனினும் உங்களிடம்

மனம் உறுத்தும் ஒரு செய்கையையும் கண்டேன். இப்னு பர்ஆ, 'அது என்ன?' என்று துணுக்குற்றுக் கேட்டார்கள்.

அபூ: உங்கள் கைகள் இரண்டையும் வானத்தை நோக்கி உயர்த்துகிறீர்கள், பூமியின் மீது உங்கள் நெற்றியைத் தாழ்த்துகிறீர்கள். அப்படி என்றால் உங்கள் அபிப்பிராயத்தில் அல்லாஹு தஆலா எங்குள்ளான்.

இப்னு பர்ஆ: ''நம் கைகளை நமது ரிஸ்கு வெளியாகும் இடத்தை நோக்கி உயர்த்துகின்றோம். நம்முடைய உடல்கள் உற்பத்தியாகும் இடத்தின் மீது நமது நெற்றியை தாழ்த்துகின்றோம். முந்தியதில் நம் ரிஸ்கைத் தேடுகின்றோம்; பிந்தியதில் நமது உற்பத்தி ஸ்தானத்தில் தீங்கைநீக்கத்தேடுகின்றோம். இன்னும் ''வானத்தில் உங்களது ரிஸ்க்கும் இன்னும் உங்களுக்கு வாக்களிக்கப்பட்டதும் உள்ளது'' என்றதும் ''இதிலிருந்தே (இந்த பூமியில் இருந்தே) உங்களைப் படைத்தோம். இன்னும் அதிலேயே உங்களை மீட்டுவோம். இன்னும் அதிலிருந்தே உங்களை மறுபடியும் வெளியேற்றுவோம்.'' என்ற அல்லாஹு தஆலாவின் சொல்லைக் கேட்டதில்லையா?'' என்று பதிலிறுத்தார்கள்.

இவர்களின் இந்த விளக்கத்தைக் கேட்டு அதிசயித்து நின்ற வீட்டுக்காரரான முஹலல்பீ, ''ஆஹா! என்ன அற்புதமான விளக்கம். உங்களது காலத்தில் உங்களைப்போல் வேறொருவரை அல்லாஹு தஆலா படைக்கவில்லை,'' என உறுதி கூறுகிறேன் எனக் கூறினார். [இத்திஹாஃப் பக்கம் 35 பாகம் 5]



# 3. துஆக் கேட்கும் போது கடைப்பிடிக்க வேண்டிய ஒழுங்குகள்

நாம் கேட்கும் துஆ அல்லாஹ் தஆலாவிடம் விரைவில் ஏற்றுக்கொள்ளப்பட சில விதி முறைகளும், ஒழுங்கு முறைகளும்உள்ளன. அவற்றைப் பேணுவது மிக மிக அவசியமாகும். இந்த முறைகள் குர்ஆனிலும், ஹதீதிலும் கண்ணியத்துக்குரிய நம் இமாம்கள், மஷாயிகுகள், ஸாலிஹீன் ஆகியோரின் நடைமுறைகள் மூலமும் தெரிவு செய்யப்பட்டு அமல் நடத்தப்பட்டு வந்துள்ளவை. இவற்றை உலகப் பிரசித்தி பெற்ற இஸ்லாமிய ஞானக்கருவூலமான இஹ்யா உல் உலூமித்தீனில் இமாம் கஸ்ஸாலீ (ரஹ்) அவர்களும், (பத்து ஒழுங்குகள்) இதன் விரிவுரையான இத்திஹாஃபுஸ்ஸாதில் முத்தகீன் என்னும் பெருநூலில் அதன் ஆசிரியர் இமாமுனு முர்தலா அஜ்ஜபீதீ (ரஹ்) அவர்களும் (ஐந்தாம் பாகம் பக்கம் 31-45) மிகவிரிவாய் பல ஆதாரங்களுடன் விவரிக்கிறார்கள். அவையாவன:

1. துஆக் கேட்பதற்கு நல்ல நேரத்தை எதிர் பார்த்துச் செய்தல்.

2. நல்ல சந்தர்ப்பங்களை எதிர்பார்த்துக் கேட்டல், உதாரணம் மழை பெய்யும் போது, பர்ளு தொழுது முடித்தபின், பாங்கு—இகாமத்திற்குமிடையில்.

3. கிப்லாவை முன்னோக்கி இரண்டு கைகளையும் உயர்த்திக் கேட்டல், துஆ முடிந்தபின் கைகளை முகத்தில் தடவிக் கொள்ளவேண்டும்.

4. அதிக சப்தமில்லாமலும், மிகவும் மெதுவாய் (மௌனம் போல்) இல்லாமலும் இரண்டுக்குமிடையில் கேட்கவேண்டும்.

5. வாசக அலங்காரத்தை கவனிக்கக்கூடாது. அழகான சொற்றொடர்களாயிருக்க வேண்டுமென அதற்காகக் கால விரயம் செய்யக்கூடாது.

6. தரத்துக்கு மிஞ்சிய தேவைகளைக் கேட்காமலிருத்தல்.

7. பயபக்தியுடனும், தாழ்மையுடனும் பணிவடக்கத்துடன் கேட்கவேண்டும்.

8. அல்லாஹுத ஆலா நமது துஆவை ஏற்றுக் கொள்வான் என்ற நம்பிக்கையுடன் கேட்டல்.

9. துஆவை மிக கவனத்துடனும், ஆர்வத்துடனும் திருப்பித் திருப்பிக் கேட்க வேண்டும்.

10. துஆ ஆரம்பிக்கும் போது அல்லாஹுதஆலாவைப் புகழ்ந்து அந்தப் புகழை அவன் திருநாமங்களைக் கொண்டு முடித்து, ரஸூல் (ஸல்) அவர்கள் மேல் ஸலவாத் சொல்ல வேண்டும். துஆவை முடிக்கும்போதும் ரஸூல் (ஸல்) அவர்களின் ஸலவாத்தைக் கொண்டு முடிக்க வேண்டும்.

11. தௌபா உடையவராய்(பாவம் செய்தவராயிருந்தால் அதை விட்டும் நீங்கி இனிமேல் அதைச் செய்யமாட்டேன் என உறுதிபூண்டவரா)யிருக்க வேண்டும். அநியாயமாய் கைப்பற்றப்பட்டவற்றை உரியவரிடம் திருப்பித் தந்துவிட வேண்டும். உரியவர் கிடைக்கப் பெறுவிட்டால், அவற்றை தானதர்மங்களில் செலவிட வேண்டும். அல்லாஹுத ஆலாவே தஞ்சம் என்ற உறுதிப்பாட்டின் பலத்தை அவன் பக்கம் முழுவதுமாய் திருப்பி இருக்க வேண்டும்.

12. உடல், உடை துப்புரவாயிருத்தல் வேண்டும்; ஏனெனில் துஆ என்பது குர்ஆன் ஓதுதல், பாங்கு சொல்லுதல் போன்றது.

13. துஆக் கேட்பதற்கு முன் ஏதேனும் தர்மம் செய்தல்.

14. இயன்ற அளவு ரஸூல் (ஸல்) அவர்கள் கேட்டுள்ள துஆவாகவே இருக்க வேண்டும். நபிமார்கள் கேட்ட துஆக்களாகவும் இதுபோல் வலிமார்கள் வழமையாய் ஓதி வந்த துஆக்களாகவும் இருக்க வேண்டும். அதையே நியமமாய் இடைவிடாது ஓதி வரவேண்டும்.

15. நபிமார்கள், ஸாலிஹீன்கள், வலிமார்களை முன்னிறுத்தி துஆவை ஏற்றுக்கொள்ளும்படி அல்லாஹுதஆலாவிடம் கேட்க வேண்டும்.

(இத்திஹாஃப் பக்கம் 44 பாகம் 5)

16. தன் தேவையை முதலில் கேட்க வேண்டும்; இமாமாய் இருந்தால் முதலில் தன் தேவையைக் கேட்காதிருத்தல் வேண்டும்.

17. மார்க்கத்திற்கும், அறிவிற்கும் பொருந்தாதைக் கேட்காமலிருத்தல். உதாரணமாக, என்னை என்றென்றும் உயிரோடு இருக்கச் செய்வாயாக; இன்னார் இறந்துவிட்டார், அவரை உயிர்ப்பிப்பாயாக என்பன போன்றவற்றைக் கேட்காது இருத்தல்.

18. மார்க்கத்தில் விலக்கப்பட்டவற்றைத் தரும்படி கேட்காதிருத்தல்.

19. அதிகாரம், பெருமை என்றும் நிலைத்திருக்கவும், வயதை அளவுக்கு அதிகமாய் நீளமாக்கும்படியும், அளவு கடந்த பொருளீட்டத்துக்காகவும், தன் ஆசாபாசங்களைத் தீர்த்துக்கொள்ளவும், இவை போன்றவற்றைக் கேட்காதிருத்தல்.

20. அல்லாஹுதஆலா தனக்குத்தந்தே ஆகவேண்மென்றில்லாமல் துஆ வேண்டுகோளாக, மன்றாட்டமாக இருக்கவேண்டும்.

21. துஆவில் சிறிய பெரிய தேவைகள் என்று தரம் பிரிக்காமல் அனைத்துத் தேவைகளையும் கேட்டல்.

22. அல்லாஹு தஆலா நம் துஆவை ஏற்பதில் தாமதம் உண்டாகும் போது, அது பற்றிச் சங்கடம் கொள்ளாதிருத்தல்.

23. பிறருக்குக் கேட்டுத் தன்னை விட்டு விடாமலிருத்தல். பொருள் புரியா வாசகங்களைக் கொண்டு கேட்காதிருத்தல்.

24. குர்ஆன், ஹதீதல்லாமல் அல்லாஹு தஆலாவின் நல்லடியார்கள், இன்னும் அவர்களைக் கொண்டு புண்ணியம் பெறக் கூடியவர்களின் துஆவை ஓதி மன்றுடிக் கேட்டல்.

25. துஆ கேட்கும் நாவு எப்போதும் தீய வார்த்தைகள் பேசாமல் பாதுகாக்கப்படுதல்.

துஆவின் மேற்கண்ட ஒழுங்கு முறைகளை நிதானமாய், கவனமாய், பேணுதலுடன் கடைப்பிடிப்பவர்கள் தங்கள் துஆ நிச்சயமாய் ஒப்புக் கொள்ளப்படும் என உறுதி கொள்ளும்படி வகைப்படுத்தப்பட்டுள்ளதை அறிவார்கள். இந்த ஒழுங்கு முறைகளை கண்ணுறும் எவரும் ஸுன்னத் வல் ஜமாஅத் ஒரு அமலின் சிறு அங்கத்தில் கூட எவ்வளவு கவனஞ் செலுத்தி, அது குர்ஆன் ஹதீதுக்கு மாறுபட்டு விடக்கூடாது என்பதில் பேணுதலாக இருக்கிறது என்பதை எளிதில் உணர்வர்.

மேலும், மேற்சொன்ன அதபுகள் அனைத்தும் பேணி துஆக் கேட்கும் பண்பு மனிதர்களிடத்தில் அருகிவிட்டமையால், மனிதர்கள் ஒன்று கூடும் நேரங்களில் துஆ ஓதப்பட்டால் அது எல்லோரும் பயனடையும் படியாக அமையும் என்பதை கவனத்தில் கொண்டு, ஷரீஅத்தின் தெளிவான உத்தரவுடன் அமைந்துள்ள பர்ளுத் தொழுகைக்குப்பின் துஆ ஓதுவது. தொழுபவர்கள், தொழு

கைக்கு வருபவர்கள் அனைவரும் துஆவின் அதபுகளையும் பேணுபவர்களாக இருக்க உறுதி செய்கிறது. பர்ளு தொழுதவுடன் துஆக்கேட்பது அனைத்து ஒழுங்குகளையும் பேணிய அமலாகி இபாதத்திற்கு உசிதமான காலகட்டமுமாகின்றது. துஆவை ஒப்புக்கொள்வதற்கான அதபுகள், அதற்கான புனிதமான நேரங்கள் ஆகியவை கடமையாக்கப்பட்ட பர்ளு தொழுகைக்குப்பின் இருப்பதனால் அவ்வமயம் துஆக் கேட்கும்போது அது அல்லாஹுதஆலாவுக்கு இசைவாகவும், அவன் ஏற்றுக் கொள்வதற்குரிய பொருத்தம் உடையதாகவும், அவன் உடனே ஏற்றுக்கொள்ள வகை உடையதாகவும், நாம் ஒரு நல்ல கடமையை உரிய முறையில் நிறைவேற்றினோம் என்பதனால் நமக்கு நிம்மதி தருவதாகவும் இருப்பதனால் தான் இது ஷரீஅத்தில் பெரிதும் வலியுறுத்தப்பட்டிருக்கிறது.



# 4. ஜமாத்தாய் துஆக் கேட்பதின் அவசியம்

அல்லாஹு தஆலாவின் பொருத்தம் என்னும் பேருபகாரத்தை விட்டும் நீங்கிய அபாக்கியவான்களின் வரட்டு வாதங்களில் ஒன்று பர்ளு தொழுகைக்குப்பின் துஆ ஓதக் கூடாது என்றாகி விட்டதால், அந்த வாதத்தை மேலும் விரிவுபடுத்தி வாய்க்கு வந்த வினாக்களை மார்க்கத்தின் சாயலில் கேட்டுத் தங்களுக்கு மார்க்கம் தெரியாததை அவர்களாகவே முன் வந்து ஏற்றுக்கொள்கிறார்கள். 'பர்ளு தொழுகைக்குப்பின் துஆ ஓதுவதென்றாகிவிட்டால், துஆ ஆகுமாக்கப்பட்ட இடங்களில் இதுவும் ஒன்றா? சப்தமிட்டு ஓதலாமா? இமாம்

ஓத மற்றவர்கள் அமைதியாயிருந்து 'ஆமீன்' மட்டும் சொல்லலாமா?' என்று கேள்விகளைக் கேட்டுத் தாமும் குழம்பி, பிறரையும் குழப்பமுனைகின்றனர். இந்த ஞான சூனியங்களுடைய பித்துக்களால் உந்தப்பட்ட நம்மவர் கள் சிலர்: ''எங்களுக்கு தீனுல் இஸ்லாத்தில் எந்தவித மாறுபாடோ, கருத்துப் பிசகோ இல்லை; எனினும் இவ் வாறு சில ஐயப்பாடுகளைத் ''தாங்களும் மார்க்க ஞான முடையவர்கள்'' என்று பறை சாற்றிக் கொள்ளும் சிலர் எழுப்புகிறார்களே, அதுபற்றித் தெளிவு பெறவே கேட்கி றோம்,'' என்கின்றனர். எனவே, அவர்களுக்காக வேண்டி நாம் இது பற்றி விவரிப்பது மிக அவசியமாகின்றது.

ஜமாஅத்தின் சிறப்பையும், முக்கியத்துவத்தையும் பற்றி ஷரீஅத் எவ்வளவு தூரம் வலியுறுத்தியிருக்கிறது என்பதை எவரும் மறுக்கமாட்டார்.

அல்லாஹு தஆலா குர்ஆனில் தன்னிடம் 'துஆ'க் கேட்க ஏவும் வசனங்களில் எல்லாவற்றிலும் முஃமின்கள் அனைவரையும் நோக்கி, ஆணையாகவே கூறியுள்ளான். இதிலிருந்து 'ஜமாஅத்தாய்' ஒன்று கூடி துஆக் கேட்பது ஷரீஅத்தின் தெளிவான உத்தரவுகளில் ஒன்று எனப் பெறப்படுகிறது. இதை இல்லையென்று மறுப்பவன் ஜமா அத்தின் — சமுதாயத்தின் — விரோதியாகிறான்.

''எவனொருவன் என்னை ஒரு கூட்டத்தில் பிரஸ்தா பிக்கின்றானோ அவனை அதைக் காட்டிலும் நல்ல கூட்டத் தத்தில் எடுத்துரைப்பேன்'' என்று வரும் ஹதீது குத் ஸீயில்; 'கூட்டத்தில் எடுத்துச் சொல்வது' என்பதி லிருந்தே ஜமாஅத்தில் திக்ரு, துஆச் செய்வதற் கும் கூட்டத்தில் சொல்வது சப்தமிட்டே ஆகக்கூடியது என்பதால் துஆவை சப்தமிட்டு ஓதலாம் என்பதற்கும் தெளிவான புத்தியுடையவர்களுக்கு ஆதாரமாய் விளங் கும். இது மட்டுமல்லாமல், ரஸூல் (ஸல்) அவர்கள் ''அல்லாஹுவின் உதவி ஜமாஅத்துக்கே உள்ளது'' என்று கூறியுள்ளார்கள். மேலும், ரஸூல் (ஸல்) அவர் களும் ஸஹாபாக்களும் ஒன்று சேர்ந்து ஜமாஅத்தாய்

துஆக் கேட்ட நிகழ்ச்சிகளும் அனந்தம் உள்ளன; அவற்றில் சில:

ஜைதுப்னு தாபித் (ரலி), அபூஹுரைரா (ரலி), ஸஹாபீ ஆக மூவரும் பள்ளியில் ஒன்று சேர்ந்து அபூஹுரைரா (ரலி) துஆக் கேட்க மற்றிருவர் 'ஆமீன்' கூறுவதுமாய் துஆச் செய்து கொண்டிருந்தபோது, ரஸூல் (ஸல்) அவர்களும் வந்து, அவர்களின் துஆவில் கலந்துகொண்ட நிகழ்ச்சி தப்ருனியில் பதிவு செய்யப் பட்டுள்ளது.

உஹதுப் போர் நடப்பதற்கு முன் அப்துல்லாஹ் இப்னு ஜஹ்ஷ் (ரலி), ஸஃதுப்னு அபீ வக்காஸ் (ரலி) ஆகிய இருவரும் ஒன்று சேர்ந்து துஆச் செய்து, ஒருவர் ஓத மற்றொருவர் 'ஆமீன்' சொன்னார்கள். மறுநாள் ஹஸ்ரத் அப்துல்லாஹ் ஷஹீதானார்கள். ஸஃதுப்னு அபீ வக்காஸ் (ரலி) பகைவர்களில் பலரைத் தம் வாளுக்கிரை யாக்கினார்கள் என்ற விபரம் இஸ்லாமிய சரித்திர ஏடுகள் அனைத்திலும் தெளிவுற எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

ஆதாரத்திற்காகவே ஒன்றிரண்டு கூறினோம். இன்னும் எழுதுவதென்றால் இந்தத் தலைப்புக்கு மட்டும் பல நூறு பக்கங்கள் எழுதலாம். நன்கு தெரிந்துகொண்டு அமல் செய்பவனுக்கு ஆதாரம் தேவையில்லை. ஆதாரம் தேடுபவன் அமல் செய்யாமலிருக்கத் தன் சோம்பேறித் தனத்தை நியாயப்படுத்த குர்ஆன் ஹதீதை அரை குறையாக எடுத்துக் காட்டுவான்; தவறான விளக்கங்களைக் கொடுப்பான். இவனை விடப் பல்லாயிரம் மடங்கு ஞானத்திலும், பேணுதலிலும், தக்வாவிலும், உயர்ந்து நிற்கும் நல்லோர்களை, ஞான மாமேதைகளைக் குறை கூறுவான். இறுதியில் இறைவனின் கோபத்துக்குத் தன்னை முழுமையாக ஆளாக்கிக் கொள்வான்.



# 5. ஷப்பீர் அஹமது உதுமானியும்-அவரது தீர்ப்பும்

ஷப்பீர் அஹமது உதுமானீ—இவர் தேவ்பந்த் தாருல் உலூமில் மார்க்கக் கல்வி பயின்று; அங்கேயே நீண்ட காலம் ஆசிரியராகப் பணியாற்றி, ஹதீதில் நல்ல பாண்டித்தியம் பெற்றூர். இவர் தேவ்பந்த்—மற்றும் அவர் காலத்தில் இஸ்லாத்திற்கு—ஸுன்னத் வல் ஜமா அத்திற்கு எதிராகக் கிளம்பிய பணபல இயக்கங்களான முஜாஹித், இஸ்மாயீல் ஷஹீது ஷாஹ் இயக்கம், அஹ்ல ஹதீஸ், சில ஜமாஅத்துகள், வஹ்ஹாபி இயக்கம் போன்றவர்கள் கையாள்வதும் ஹதீது தானே. ஹதீதைக் கொண்டு ஆதாரமாய்ச் சொல்லப்படும் எந்த ஒரு செயலும் ஆகுமானதுதானே என்று எண்ணி முடிவில் அவர்களின் சகல திரிபு வாதங்களுக்கும் ஹதீதுகளை ஆதாரமாய்க் காட்டும் பணியில் அமர்த்தப்பட்டு, அவர்களின் முழுப் பணியாளராஞர். அன்றியும் இவர்களின் பொய்க் கூற்றுகளுக்கு இஸ்லாத்தின் வடிவம் கொடுக்க வேண்டுமென முடிவு செய்து குர்ஆன் ஷரீபுக்கு விரிவுரை (தப்ஸீர்) ஒன்றை வெளியிட்டார், இது தான் இந்தியாவில் இஸ்லாமிய விரோதிகளின் நடவடிக்கைக்கு மார்க்கக் கல்வியின் சாயம் பூசி வந்த முதல் நூல். அதன்பின் தம் கைவசமிருந்த ஹதீது கலை ஞானத்தை விலைபேசி, நம்பகமான ஆறு ஹதீது திரட்டுகளில், இரண்டாம் இடம் வகிக்கும் முஸ்லிம் ஷரீபுக்கு—பத்ஹுல் முல்ஹிம் என்ற பெயரில் மிகப்பெரிய அளவில் ஒரு விரிவுரை எழுதினர். இதில் நமது ஸுன்னத் வல் ஜமாஅத் அறிஞர்களின் பேச்சுகள், விளக்கங்கள், தீர்ப்புகள் அனைத்தையும் எடுத்தெழுதி இடையிடையே மேற்சொன்ன இயக்கங்களின் தலைவர்கள், இப்னு தைமிய்யா, இப்னு கையிம், இப்னு கதீர், இப்னு அப்தில் ஹாதீ, அலாவுத்தீன் புகாரீ, ஆலூஸி, அவர்

மகன் ஷௌகானீ, போபால் நவாபாக இருந்த ஸித்தீக் ஹஸன்கான், இவர் மகன், ஹாமிதுல் ஃபகீ போன்ருேர் களின் மாறுன பிரச்சாரங்களேயும் கனகச்சிதமாய் புகுத்திவிட்டார். மேலும் இவரது மேற்கண்ட விரிவுரை யில் வஹ்ஹாபீ முல்லாக்கள், அஹ்ல ஹதீஸின் அங்கத் தினர்கள், சில ஜமாஅத்களின் நிறுவனர்கள், முஜாஹி தீன்களின் முதவல்லிகள் போன்ருரின் கொள்கை விரோத அபவாத அபாண்டப் பிரச்சாரங்களேயும், எவ ரும் எளிதில் அறியமுடியாதபடி வெகு நேர்த்தியாய் இடைச் செருகல் செய்துள்ளார். தம்மை ஹனபீ மதுஹ பின் விபரமான அறிஞர் எனப் பறை சாற்றுவதில் மிகக் கவனம் செலுத்தி, தாம் ஹதீது விளக்கவுரையில் செய் துள்ள மாறுபாடுகள் தெரியாவண்ணம், மிகச் சிரத்தை யுடன் மூடி மறைத்துள்ளார். ஆரிபீன்கள், ஞானப் பாட்டை உடையவர்கள் குறைகாணுது தம்மை விட்டு விட ஞானிகளின் சிரேஷ்டர் ஷைகுல் அக்பர் முஹ்யித் தீன் இப்னு அரபி (ரலி) அவர்களின் பேச்சுகளே பல இடங்களில் கவனமாய் நுழைத்துத் தப்பித்துக் கொண் டுள்ளார்.

இப்பேற்பட்ட கைங்கரியம் உள்ளவரே அன்னே ஆயிஷா (ரலி), தௌபான் (ரலி) ஆகியோர்களின் அறி விப்பில், ஸஹீஹ் முஸ்லிமில் வரும் ஹதீதுகளுக்கு விரி வுரை எழுதும்போது, ஸுன்னத் வல் ஜமாஅத்தின் தூண் போன்றவர்களான இமாமுனு இப்னு ஹஜர் அஸ்கலானி ஷாபிஈ (ரஹ்) புகாரீ ஷரீபுக்கு எழுதியுள்ள பத்ஹுல் பாரீ என்ற விரிவுரையிலிருந்தும், ஹனபீ மத்ஹபின் ஆதாரமிக்க கிரந்தமும் சுன்னத் வல் ஜமாஅத் — மத்ஹபு கள் ஹதீதின் மீதே அணுவளவேனும் பிறழாமல் அமைக்கப்பட்டுள்ளன என்பதை விவரித்து இமாம் இப் னுல் ஹுமாம் (ரஹ்) எழுதியுள்ள பத்ஹுல்கதீர் என்ற கிதாபிலிருந்தும், உலகப் பிரசித்தி பெற்ற இஸ்லாமிய ஞானக் கருவூலமான இஹ்யாஉல் உலூமித்தீன் என்ற பெருங்கிரந்தத்திற்கு இமாம் முர்தளா அஜ்ஜபீதி (ரஹ்) அவர்கள் எழுதியுள்ள இத்திஹாஃபுஸ்ஸாதாதில் முத்த

கீன் என்ற உன்னதமான நூலிலிருந்தும், இந்தியாவில் மார்க்கத்துக்கு வேண்டிய ஹதீதுக்கலையை புனருத்தா ரணம் செய்து, மக்களை தீன் நெறியில் உய்விக்க வந்த இமாம் ஷாஹ் வலியுல்லாஹில் தெஹ்லவீ (ரஹ்) அவர்களின் தீர்ப்பையும் தொகுத்து, பர்ளு தொழுதபின் துஆ ஓதுவது ஆகும், அது ஸுன்னத்தான அமல் எனத் தெளிவாய் எடுத்துக் கூறி இது விஷயத்தில் தம் மனசாட்சியை மீற முடியாததை இனங்காட்டியுள்ளார்.

கீழே மௌலானா ஷப்பீர் அஹமதின் கருத்தை பத்ஹுல் முல்ஹிமிலிருந்து அடிமாறுமல் தெளிவாய் தருகிறேன்.

ரஸூல் (ஸல்) அவர்கள் தொழுது முடிப்பார்களே யானுல் மூன்று முறை அஸ்தஃபிருல்லாஹ் என்று கூறுவர்; இன்னும்,

## ''அல்லாஹும்ம அன்தஸ் ஸலாம் வ மின்கஸ் ஸலாம் வ தபாரக்த்த யா தல் ஜலாலி வல் இக்ராம்''

என்று ஓதுவார்கள். [பதிவு: முஸ்லிம். அறிவிப்பவர்: தௌபான் (ரலி) பத்ஹுல் முல்ஹிம் பக்கம் 174 பாகம் 2]

ரஸூல் (ஸல்) அவர்கள் (பர்ளுத் தொழுகையிலிருந்து) ஸலாம் கொடுப்பார்களேயானுல் அல்லாஹும்ம அன்தஸ்ஸலாம்...என்றும் சொல்லும் அளவே தவிர உட்காரமாட்டார்கள். [பதிவு: முஸ்லிம்; அறிவிப்பவர்: அன்னை ஆயிஷா (ரலி) பத்ஹுல் முல்ஹிம்பக்கம் 175 பாகம் 2]

இந்த ஹதீதுகளிலிருந்து பர்ளுத் தொழுகைக்குப் பின் துஆ கடமையாக்கப்படவில்லை என சிலர் சந்தேகிக்கின்றனர். அதற்கு பதிலாவது: இதற்கு மேல் உட்கார

மாட்டார்கள் என மறுத்திருப்பது தொழுகையில் உட கார்ந்த நிலையில் இருப்பது போல் ஸலாம் கொடுத்தபின் அல்லாஹும்ம அன்தஸ் ஸலாம்...என்ற துஆ ஓதும் நேர அளவே உட்கார்வார்கள் என்பது தான் கருத்து. மற்றுமுள்ள ஹதீதுகளில் ரஸூல் (ஸல்) அவர்கள் தொழுது முடிப்பார்களேயானால் ஸஹாபாக்களை முன் னோக்கி அமர்வார்கள் என்று வருவதில் தொழுகைக்குப் பின் ஓதும் படியாய் வந்துள்ள துஆவை ஓதியவர்களாய் ஸஹாபாக்களை முன்னோக்கித் திரும்பி உட்கார்வார்கள் என விளங்க இடமுள்ளது.

இப்னுல் கையிம்: ஹூதாந் நபவீ என்ற கிதாபில் ஸலாம் கொடுத்தபின் கிப்லாவை முன்னோக்கி இமா மும், ஜமாஅத்தும் அல்லது தனித்து தொழுபவரோ துஆக் கேட்பது அறவே ரஸூல்(ஸல்)அவர்கள் காட்டிய நேர்வழியைச் சேர்ந்ததல்ல. இது ஆதாரப்பூர்வமான, நம்பகமான ஹதீதுகளில் அறிவிக்கப்படவில்லை. சில பேர் இந்த துஆவை ஃபஜ்ரு, அஸர் தொழுகைக்குப் பின் னுல் மட்டும் ஓதலாம் எனப் பிரித்துக் கூறியுள்ளனர். இவ்வாறு ஸுப்ஹு அஸர்த் தொழுகைக்குப்பின் ரஸூல் (ஸல்) அவர்களோ, அவர்களின் நாற்பெரும் கலீபாக் களோ செய்யவில்லை. அவர்களின் உம்மத்தில் யாரே னும் வழி நடத்திச் சென்றதுமில்லை. இதை இவ்விரு தொழுகைக்குப்பின் ஸுன்னத்துத்தொழுகைஇல்லாமை யினுல் அதற்குப் பகரமாய் இதை (துஆவை) வைப்பது நல்லது என அறிந்தோர் சிலர் உண்டு பண்ணியதே.

தொழுகையில் ஓதுமாறு கூறப்பட்ட அனைத்து துஆக்களும் தொழும் போது ஓதக் கூடியவையே. இவற்றை அதனுள்ளே ஓ த வே ஏவப்பட்டுள்ளது. இதுவே தொழுபவனுக்குத் தகுதியானது. ஏனெனில் தொழுபவன் அல்லாஹுதஆலாவை முன்னோக்கி சம்பா ஷித்துத் கொண்டிருப்பவன். தொழுகையிலிருந்து 'ஸலாம்' கொடுத்து விட்டால் இறைவனும் சம்பாஷிப் பது தடைபெற்று நின்றுவிடுகின்றது. அவனது இறை

யண்டுதலும் அவன் சன்னிதானத்தில் பிரசன்னமாகி யிருப்பதும் முடிந்துவிடுகின்றது. இவ்வாறு இறைவனின் சன்னிதானத்தில் அவனிடம் சம்பாஷித்துக் கொண்டிருப் பவன் உடனே எப்படி அதை முறித்துக் கொள்ள முடியும்? அதனால்தான் அதன் அடுத்த நிலையிலான ஸலாம் கொடுத்தபின் உள்ள நேரத்தில் அவனை அந்த நிலையிலேயே முன்னோக்கி முறையிட்டு துஆச் செய்து அதன் பின் இடம் பெயர்கின்றான்.

தொழுகைக்குப்பின் ஓத வேண்டுமென ஹதீது மூலம் வந்துள்ள விர்துகளை ரஸூல் (ஸல்) அவர்களின் மீது ஸலவாத்துச் சொன்னபின் ஓதுவது முஸ்தஹப்பாகும். அதன்பின் அவன் நாடிய துஆவைக் கேட்க வேண்டியது. இதுபோலுள்ள துஆக்கள் உறுதி செய்யப்பட்டுள்ள திக்ருகளுக்குபின் ஓதவேண்டியவை-அவை பர்ளுத் தொழுகைக்கு பின்னால் இருப்பதனால் மட்டுமல்ல எனக் கூறி துஆ என்பது தொழுகைக்குப்பின் உள்ள திக்ரு செய்தபின் ஓதவேண்டியதுதானே தவிர,பர்ளுத் தொழுகைக்கு பின்னால் ஓத வேண்டுமென்பதில்லை என்று துஆ ஓதுவதை அவரால் மறுக்க முடியாமல்—விக்கவும் முடியாமல், கக்கவும் முடியாமல்—சமாளிக்க முயன்றார்!

ஹாபிலு இப்னு ஹஜ்ர் அஸ்கலானீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: "இப்னுல் கையிம் முழுக்க முழுக்க தொழுகைக்குப்பின் துஆ ஓத வேண்டுமென ரஸூல் (ஸல்) அவர்களிடமிருந்து வரவே இல்லை'' என வாதம் செய்வது மறுக்கப்பட வேண்டியது.

ரஸூல் (ஸல்) அவர்கள் மஆதுப்னு ஜபல் (ரலி) அவர்களை நோக்கி "மஆதே! அல்லாஹ்வின் ஆணையாக நிச்சயமாய் நான் உம்மைப் பிரியம் வைத்துள்ளேன். தொழுதபின், ''இறைவா உன்னை நினைக்க (ஜபிக்க)வும், உனக்கு நன்றி செய்யவும், உனக்கு நல்ல அமல்கள் செய்யவும் உதவி செய்வாயாக!' என்று துஆக் கேட்காமல் இருந்து விடாதீர்,'' என்று கூறிய ஹதீதை அபூதா

வூது, நஸஈ போன்ற நம்பகமான ஹதீது} திரட்டுகளில் மஆது (ரலி) அவர்களின் மூலம் அறிவிப்பதை இப்னு ஹிப்பானும், ஹாகிமும் சரிகண்டிருப்பதின் மூலம் உறுதிப்படுத்தப்பட்டுள்ளது.

மேலும், ''இறைவா! குப்ரு, மிடுமை, கப்ரின் வேதனை ஆகியவற்றை விட்டும் உன்னிடம் நான் பாதுகாவல் தேடுகிறேன்,'' என்று ரஸூல் (ஸல்) அவர்கள் எல்லாத் தொழுகைக்குப் பின்னும் ஓதுபவர்களாயிருந்தார்கள் என்ற ஹதீதை ஸஹாபீ அபூபக்ரா (ரலி) அறிவிப்பை அஹ்மது, திர்மதீ, நஸஈ பதிவு செய்துள்ளதை ஹாகிம் (ரலி) சரிகொண்டுள்ளனர். இதேபோல் ஸஃது (ரலி) அவர்களின் அறிவிப்புமுள்ளது.

இன்னும் ஜைதுப்னு அர்கம் (ரலி) அவர்கள்: ''ரஸூல் (ஸல்) அவர்கள் எல்லாத் தொழுகைக்குப்பின்னும் 'அல்லாஹுவே! எங்கள் ரப்பே! இன்னும் எல்லா வஸ்துக்களின் ரப்பே!' என்று துவங்கும் துஆவை ஓதுபவர்களாக இருந்தார்கள்'' என அறிவிக்கும் ஹதீதை அபூதாவூதுவும், நஸஈயும் பதிவு செய்துள்ளனர். மேலும், ரஸூல் (ஸல்) அவர்கள் தொழுகை முடிந்தவுடன் ''இறைவா! எனக்கு மார்க்கத்தை இணக்கமாக்கி வைப்பாயாக!'' எனத் துவங்கும் துஆவை ஓதுபவர்களாயிருந்தார்கள் என்று ஸுஹைப் (ரலி) அறிவிக்கும் ஹதீதை நஸஈ பதிவு செய்துள்ளதை இமாம் இப்னு ஹிப்பான் போன்றோர் சரி கண்டுள்ளனர்.

'தொழுகையின் பின்' என்று வரும் ஹதீதுக்கு தொழுகையின் கடைசியாயிருக்கும் தஷஹ்ஹுது என வழிந்துரை செய்யப்படுமேயானால் தொழுகைக்குப்பின் திக்ரு செய்யும்படியான ஏவல்கள் ஸஹீஹான ஹதீதுகளில் வந்துள்ளதை பதிலாகக் கொள்ளலாம். மேலும் தொழுகையின் பின் என்பதற்கு ஸலாம் கொடுத்தபின் என்னும் பொருளே பொருத்தமான ஏகோபித்த முடிவாகும். இது போலவே உள்ளதற்கு மாற்றமாய்

வழிந்துரை செய்பவர்களுக்குத் தெளிவாய் அறிவிக்கப் படும்.

இன்னும், அபூ உமாமா (ரலி) ''யா ரஸூலல் லாஹ்! எந்த துஆ அல்லாஹூ தஆலாவிடம் சீக்கிரமாய் ஒப்புக் கொள்ளப்படக்கூடியது?'' எனக் கேட்டார்கள். அதற்கு ரஸூல் (ஸல்) அவர்கள் 'இரவில் கடைசி நேரமும், பர்ளுத் தொழுகைக்குப் பின்னும்' என மறுமொழி பகர்ந் தனர் என்ற ஹதீதை இமாம் திர்மதீ (ரலி) பதிவு செய்து சரி கண்டுள்ளனர்.

ஜஃபருப்னு ஸாதிக் (ரலி) அவர்கள் ''ரஸூல் (ஸல்) அவர்கள் பர்ளுத் தொழுகைக்குப்பின் ஓதும் துஆ நபில் தொழுகைக்குப்பின் ஓதும் துஆவைக்காட்டிலும் சிறந்த தாகும். இன்னும் பர்ளுத் தொழுகைக்குப்பின் ஓதும் துஆ நபில் தொழுகையைக் காட்டிலும் பர்ளுத் தொழுகைக்குண்டான சிறப்புப் போன்றதாகும்,'' என்று கூறுவதாய் இமாம் தபரீ (ரஹ்) பதிவு செய்துள் ளனர்.

'நாம் சந்தித்த ஹன்பலீ மத்ஹபின் அநேக உலமாக் கள் 'இப்னு கையிம் பர்ளு தொழுகைக்குப்பின் துஆ ஓது வதை ஒரேயடியாய் மறுப்பது போலில்லை; தொழுத பின் தொழுதவர் கிப்லாவை முன்னோக்கி அமர்ந்த நிலை யிலேயே இருப்பதையும், ஸலாம் கொடுத்தபின் துஆ ஓதுவதையும் தான் மறுக்கிறார்,' என்பதே அவரது பேச்சின் சராம்சம் என விளக்கிறார்கள். அதே சமயம் தொழுதவர் முகத்தைத் திருப்பித் தொழுதபின் கடமை யாக்கப்பட்ட திக்ருகளை ஓதிய பின் துஆக் கேட்பாராகில் அது இப்னு கையிமிடம் மறுக்கப்பட்டதில்லை என்றும் இமாம் புகாரீ (ரலி) தொழுக்கைக்குப் பின் கடமையாக் கப்பட்ட திக்ரை விவரிக்கும் பாடத்தை 'தொழுகைக்குப் பின் கடமையாக்கப்பட்ட துஆ' என பாடத் தலைப்பின் கீழ் விவரிப்பதையும் ஆதாரம் காட்டுகிறார் என் கிறார்கள்.

மேலும் ஹாபிள் இப்னு ஹஜர் அஸ்கலானீ ஷாபிஈ (தங்களது புகாரீ ஷரீபின் விரிவுரை பத்ஹுல் பாரியில்) சொல்கிருர்கள்:

''திக்ரு செய்பவர்களுக்கு அவர்களது திக்ரு துஆ கேட்க முடியாத அளவு அதிகமிருப்பின் துஆ செய்பவர்களுக்குக்கிடைப்பதுபோல் கூலி கிடைக்கும். அல்லாஹுதஆலா கூறுகிருன், ''எவனொருவனுக்கு என்னை ஜபிப்பது என்னிடம் துஆ கேட்பதை பராக்காக்கின்றதோ அவனுக்கு என்னிடம் கேட்பவர்களைக் காட்டிலும் மிகச் சிறந்ததைக் கொடுப்பேன்'' என்று (ஹதீஸ் குத்ஸியில் சொல்வதாய்) இப்னு உமர் (ரலி) அறிவிப்பதை இமாம் தபரீ பதிவு செய்துள்ளனர். எவனொருவனுக்கு குர்ஆன் ஓதுவதும், என்னை ஜபிப்பதும் என்னிடம் துஆக் கேட்பதற்கு நேரமில்லாமல் ஆக்குகின்றதோ அவனுக்கு என்னிடம் கேட்பவர்களைக் காட்டிலும் மிகச் சிறந்ததைக் கொடுப்பேன் என்று அல்லாஹு தஆலா கூறுவதாய் ரஸூல் (ஸல்) அவர்கள் சொல்லியுள்ளதை அபூ ஸஈது (ரலி) அறிவித்துள்ளார்கள் என திர்மதீ பதிவு செய்து சரிகண்டுள்ளனர். இவ்வாறே பத்ஹுல் பாரியில் வருகின்றது.

துஆக் கேட்கும் போது கைகள் இரண்டையும் உயர்த்தி இருக்க வேண்டுமென அதிகமான ஹதீதுகள் வந்துள்ளன. இவற்றை மட்டும் தொகுத்து இமாம் முன்திபி (ரஹ்) தனி கிரந்தமாய் எழுதியுள்ளனர். இதிலிருந்து இமாம் நவவீ (ரஹ்) அவர்களின் அத்கார் என்ற கிதாபிலும் ஷரஹு முஹத்திபுலும் ஒரு தொகுப்பாய் எடுத்தெழுதியுள்ளனர். மேலும் இமாம் புகாரீ இதற்கென தனிப் பாடத்தையே எழுதியுள்ளனர். இன்னும் அபூதாவூது, திர்மதீ மற்றுமுள்ளோர்கள் பதிவு செய்து சரி கண்டுள்ள ஸல்மான் (ரலி) அவர்கள் அறிவிக்கும் ஹதீதாவது:

''நிச்சயமாய் உங்களின் ரப்பு சங்கையானவன், சங்கோசமுடையவன், தன் அடியான் துஆவில் கையை

உயர்த்துவானாகில், அதை வெறும் கையாக விடுவதற்கு வெட்கப்படுகிறான்,'' என்பதாகும்.

இன்னும் இஹ்யாவுல் உலூமில், ''ரஸூல் (ஸல்) அவர்கள் துஆவில் கையை உயர்த்தினால் அவை இரண்டையும் தங்களின் முகத்தில் தடவிய பின்பே கீழேபோடுவார்கள்'' என உமர் (ரலி) அறிவிப்பதாய் வந்துள்ளது. இராகீ இந்த ஹதீது திர்மதீயிலும்இன்னும் ஹாகிம் முஸ்தத்ரக்கிலும் அறிவிப்பதாய்ச் சொல்கிறார்கள். இது போலவே இமாம் ஜரீதியின் இஹ்யா விரிவுரையில் வருகின்றது: ரஸூல்(ஸல்)அவர்கள் தொழுகையை இரண்டிரண்டு ரகஅத்தாய் ஒவ்வொரு இரண்டு ரகஅத்திலும் தஷஹ்ஹுது இருக்கவேண்டும்இன்னும் உள்ளச்சத்துடன் மனதைக் கட்டுப்படுத்தி உன் கையையே போதுமாக்கிக் கொள், உன்னிருகையை உன் ரப்பின்பால் உள்ளங்கை முகத்தை நோக்கியிருக்கும்படியாய் வைத்து, 'யா ரப்பு, யாரப்பு!' என துஆச் செய்(ய ஆரம்பம் செய்) யார் இவ்வாறு செய்யவில்லையோ அது வீண் தான் என திர்மதீ; பள்லுப்னு அப்பாஸ் (ரலி) அவர்களின் மூலம் பதிவு செய்து சரிகண்டுள்ளனர்.

(பத்ஹுல் முல்ஹிம் பக்கம் 175 பாகம் 2)

ஏழையான முஹாஜிர்கள் ரஸூல் (ஸல்) அவர்களிடம் வந்து, ''பணக்காரர்கள் உயர்ந்த தரஜாக்களிலும், நிலையான சுக போகங்களிலும் இருக்கின்றார்கள்,'' எனக் கூறினார்கள். அதற்கு எம்பெருமானார் (ஸல்) அவர்கள் 'அது என்ன?' என வினவ, ஸஹாபிகள்: ''எங்களைப் போல் அவர்களும் தொழுகிறார்கள். இன்னும் எங்களைப் போல் அவர்களும் நோன்பு வைக்கிறார்கள். ஆனால் தர்மம் செய்கிறார்கள். நாங்கள் செய்(ய முடி)வதில்லை. அடிமைகளை உரிமை விடுகிறார்கள் நாங்கள் உரிமை விடுவதில்லை,'' என்றனர். அதற்கு ரஸூல் (ஸல்) அவர்கள், 'உங்களின் முன்னோர்கள் அடைந்து கொள்ளவும் உங்களில் பிந்திய சந்ததியினர்களுக்கு நீங்கள் முற்படுத்தி (சேமித்து)வைக்கவும் இன்னும் உங்க

ளில் நீங்கள் செய்வது போல் செய்தவர்களைத் தவிர மற்றவர்கள் யாரும் உங்களைப்போல் சிறந்தவர்களாயிருக்க மாட்டார்களோ அப்படிப்பட்ட ஒன்றை உங்களுக்குச் சொல்லித்தரட்டுமா?'' என்றார்கள். ஸஹாபாக்களும், 'சரி, யா ரஸூலல்லாஹ்!'' என்றார்கள். ரஸூல் (ஸல்) அவர்கள், ''ஸுப்ஹானல்லாஹ், அல்லாஹு அக்பர், அல்ஹம்து லில்லாஹ் என்று ஒவ்வொரு தொழுகைக்குப்பின் 33 தடவை ஓதுவீர்களாக,'' எனக் கூறினார்கள். அதன்பின் அந்த ஏழை முஹாஜிரீன்கள் ரஸூல் (ஸல்) அவர்களிடம் திரும்பி வந்து, ''எங்களில் பணக்கார சகோதரர்களும் எங்களைப் போலவே செய்கின்றனர்—ஓதுகின்றனர்,'' என்றார்கள். அதற்கு ரஸூல் (ஸல்) அவர்கள், 'அது அல்லாஹ்வின் நன்கொடை. அதை அவன் இஷ்டப்பட்டவர்களுக்குக் கொடுப்பான்'' என்றார்கள். [பதிவு: ஸஹீஹ் முஸ்லிம்.
அறிவிப்பவர்: அபூ ஹுரைரா (ரலி)]

ஹதீதின் மொத்தக் கருத்தாவது: திக்ரு என்று பிரஸ்தாபித்திருப்பது தொழுகை முடிந்தபின் ஓதுகின்ற திக்ரைத் தான். தொழுதபின் அதைச் சற்று நேரம் தாமதிப்பாரேயானால் குற்றமில்லை என்பதுதான். சில ஹதீதுகளில் ஆயத்துல் குர்ஸீ ஓதவேண்டும் என வருவதும், திக்ருடைய ஹதீதுகளில் எவ்விதத்திலும் குறை காணாது. மேலும் ரஸூல் (ஸல்) அவர்கள், ''ஒவ்வொரு தொழுகைக்குப்பின்னும்'' என்று தொழுகையை பொதுப்படக் கூறியிருப்பதால் அது பர்ளு, நபில் தொழுகைகளிரண்டையும் குறிக்கும். எனினும் பெரும்பாலான உலமாக்கள், இதை பர்ளுத் தொழுகை என்றே பொருள் கொண்டுள்ளனர். இன்னும் கஃபுப்னு உஜ்ரு (ரலி) அறிவிக்கும் ஹதீதில், முஸ்லிம் பதிவாக்கியுள்ளதில் ஒவ்வொரு பர்ளுக்குப் பின் என்று வந்துள்ளதால் இந்த ஹதீது கஅப் (ரலி) அவர்களின் அறிவிப்பு பயான் (விவரித்து) செய்து, பர்ளுத் தொழுகைக்கு பின்தான் என உறுதி செய்கிறது. இதன்படி பர்ளுத் தொழுகைக்குப் பின் வழக்கமாய் தொழும் பிந்திய ஸுன்னத்தைக்

கொண்டு திக்ரைப் பிரிப்பதா? திக்ரைக் கொண்டு பர்ளை யும், சுன்னத்தையும் பிரிப்பதா என்பது சற்று கவனிக் கப்படவேண்டியது.

மேற்கண்ட ஹதீதுகள் பர்ளு தொழுகைக்குப்பின் திக்ரு செய்யும்படி ஏவுகின்றன. மேலும் ''திக்ரு செய் வது அல்லாஹு தஆலாவின் வழிபாட்டில் பொருள்களை செலவழிப்பதற்கு ஒப்பாகும்'' எனத் தெரிகிறது என இப்னு பத்தால் (ரஹ்) கூறுகிறார்கள். இமாம் அவ்ஜாயீ (ரலி) அவர்களிடம், 'பர்ளுத் தொழுகைக்குப் பின் குர் ஆன் ஓதுவது சிறந்ததா? அல்லது திக்ரு செய்வது சிறந் ததா?' எனக்கேட்கப்பட்டது. அதற்கவர்கள் 'எவ்வஸ்து வும்—எந்த அமலும் குர்ஆனுக்கு சமமாகாது; எனினும் முன்னோர்கள் காட்டிய வழி பர்ளுத் தொழுகைக்குப்பின் துஆ ஓதுவதே,'' என மறுமொழி பகர்ந்தனர்.

இவற்றிலிருந்து, ''மேற்சொன்ன திக்ரு பர்ளுத் தொழுகைக்குப்பின் ஓதப்படும்; ஸுன்னத் தொழும் வரை பிற்படுத்தப்படமாட்டாது எனத் தெரிய வருகின் றது,'' என பத்ஹுல் பாரியில் வருகின்றது.

இமாம் ஷம்ஸுல் அயிம்மத் ஹல்வானீ ஹனபிய்யீ (ரஹ்), 'பர்ளுக்கும், ஸுன்னத்திற்குமிடையில் விர்து களை ஓதுவதில் தவறில்லை' எனக் கூறுகிறார்கள். இமாம் இப்னுல் ஹுமாம் ஹனபிய்யி (ரஹ்) பொருள் விரிக்கையில்: ''தவறில்லை என்ற சொல்லை பிரயோகிப்ப தின் பிரபல்யமான கருத்தாவது, இந்தக் காரியத்தை விட்டு வேறு ஒன்றைச் செய்வது சிறந்தது என்பதாகும். பர்ளு, ஸுன்னத்துக்கு இடையில் விர்துகளை ஓதாமலிப் பதே நல்லது. அவ்வாறு ஓதினால் தவறில்லை என்பதே பொருள். இவற்றை (விர்துகளை-அதிகநேரம்) ஓதுவத னால் ஸுன்னத் விழுந்துவிட்டது. எனினும் விர்துகளுக் குப்பின் ஸுன்னத் தொழுதால், ஸுன்னத்—அதற் குள்ள முறைப்படி இல்லாவிடினும், நிறைவேற்றப்பட்ட தாகி விடுகின்றது.

முக்தாரின் விரிவுரையான இக்தியார் அறிவிப்பதாவது: "ஒவ்வொரு பர்ளுத் தொழுகைக்குப் பின் ஸுன்னத் உள்ள தொழுகைகளில் அதற்குப்பின் உட்காருவதும்; துஆ ஓதுவதும் மக்ரூஹ் ஆகும். அதன்பின் ஆயிஷா (ரலி) அவர்களின் அறிவிப்பைச் சொல்லி இந்த அளவு பர்ளு—ஸுன்னத்திற்கிடையில் பிரிப்பது முஸ்தஹப்பாகும்,"

இமாமுல் இப்னுல் ஹுமாம் (ரலி) சொல்கிறார்கள்: பர்ளு நபிலுக்கிடையில் ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிப்புக்குமேல் பிரிக்கலாம் என எவர் வாதிடுகிறாரோ அதற்கு ஆதாரம் சொல்லச் சொல்லுங்கள்; எனினும் அதிகம் நேரம் பிரிப்பது என்பது கருத்தாகாது.

ரஸூல் (ஸல்) அவர்கள் பர்ளுக்குப்பின் "லா இலாஹ இல்லல்லாஹு லா ஷரிக்க லஹு... என்ற துஆவும், ஏழை முஹாஜிர்களுக்குச் சொன்ன 33 தடவை ஓதும் தஸ்பீஹ் போன்றவற்றைத் தொழுகைக்குப் பின் ஓதுங்கள் என்று சொன்னதும், இது போலுள்ள ஹதீதுகளும், இவற்றை பர்ளுத்தொழுகைக்குப் பின் ஓத வேண்டுமென்பதின் கருத்தாகாது; எனினும் அது ஸுன்னத்திற்குப் பின் எந்தத் தொழுகையில்லாத எதிலும் ஈடுபடாமல் ஓதினால் அது தொழுகையின் பின் ஓதியதாகவே ஆகும்.

நமது காலத்தில் பள்ளி வாசல்களில், பர்ளுக்குப் பின் ஓதும் ஆயத்துக் குர்ஸீ, 33 தடவை ஓதும் தஸ்பீஹ் போன்றவற்றைக் கொண்டு பர்ளு—ஸுன்னத்தைப் பிரிக்கும்படி ரஸூல் (ஸல்) அவர்களிடமிருந்து ஸ்திரப் படுத்தப்படவில்லை; எனினும் முஸ்தஹப்பாகும். எவ்வளவு நேரம் இருக்க வேண்டுமென்பது உறுதி செய்யப்பட்டுள்ளது. இந்த இரண்டும் (திக்ரும், துஆவும்) ஸுன்னத்தாக்கப்பட்டவையாகும். பர்ளுக்குப்பின் ஓதப்படும் அவ்ராதுகள்; பர்ளு (ஸுன்னத்)களெல்லாம் நிறைவேற்

றியபின் ஓதக் கூடியதாய் உள்ளதால், பொதுவாய் பர்ளுக்குப்பின் ஓதுவது எனப்பெயர் பெற்றது. ரஸூல் (ஸல்) அவர்களின் மூலம் உறுதி செய்யப்பட்டதாவது, முஸ்லிம், திர்மதீ ஆயிஷா (ரலி) அவர்களின் மூலம் அறிவிக்கப்பட்ட ஹதீதின் அளவேயாகும், என இமாம் இப்னு ஹுமாம் (ரலி) கூறுகிறார்கள். இதுவே தெளிவான ஆதாரமாகும். மற்றவை இதுபோல் உறுதியான ஆதாரங்களைத் தாங்கி வரவில்லை. ஆயிஷா (ரலி) அவர்களின் இந்த அறிவிப்புக்கு மாற்றமாயுள்ளதால், ஆயிஷா (ரலி) அவர்களின் அறிவிப்பைப் பின்பற்றுதல் வாஜிபாகும்.

மேலும், ஆயிஷா (ரலி) அவர்களின் அறிவிப்பில் கூறப்பட்டிருக்கும் அந்த வாசகங்களைத்தான் ஒவ்வொரு பர்ளுத் தொழுகைக்குப்பின் ஓத வேண்டுமென்பது ஸுன்னத்தில்லை, ஏனெனில் ரஸூல் (ஸல்) அவர்கள் சொன்னதே தவிர ஆயிஷா(ரலி) அவர்களாகச் சொல்லவில்லை. ஆகையால் ரஸூல் (ஸல்) அவர்கள் ஒரு முறை ஆயிஷா (ரலி) அறிவிப்பின்படி ஓதுபவர்களாயிருந்தார்கள். வேறொரு தடவை ''லா இலாஹ இல்லல்லாஹு லாஷரீக்க லஹு லஹுல் முல்கு...'' எனத் துவங்கும் துஆவை ஓதியிருக்கிறார்கள். எனவே மேற்கண்டவாசகங்களின்கருத்தாவது: பர்ளுக்குப்பின் ஸுன்னத்துக்குமிடையில் பிரிக்கும் ஸுன்னத்தான அளவாகின்றது, மேற்சொன்ன அறிவிப்புகளின் படியுள்ள திக்ரு ஆகும். அது இந்த அளவு சரியாகவோ, அல்லது சற்றுக் கூடுதலாகவோ, குறைவாகவோ அதில் சிலதைச் சேர்த்தோ சிலதை விட்டோ இருக்கலாம் என்பதே.

இதற்கு மேலுள்ள ஆயத் குர்ஸீ, தஸ்பீஹ்கள் ஸுன்னத் தொழுதபின் ஓதுவதையே ஸுன்னத்தாகக் கொள்வது அவசியமாகும். ஏனெனில் இது ரஸூல் (ஸல்) அவர்களிடமிருந்து (பர்ளுத் தொழுகைக்குப் பின் ஸுன்னத்துக்கு முன் ஓதக்கூடியது என) உறுதிப்படுத்தப்பட்டதாய் நான் அறியவில்லை எனினும் முஸ்தஹப்

பாகும். என்னிடம் இமாம் ஹல்வானி (ரஹ்) அவர் களின் சொல் மேற்சொன்ன இரண்டு சொற்களுக்கும் மாறுபட்டதில்லை. ஆகவே பர்ளுக்கும் ஸுன்னத்திற்கு மிடையில் விர்துகளை ஓதுவது ஸுன்னத்தான காரியம் என்பதைத் தடுக்காது என்பதே இதன் மூலம் பெறப்படு கின்றது. இவ்வாறு இஹ்யாவின் விரிவுரையில் இமாம் ஜபீதி(ரலி) கூறுகிறார்கள். (இத்திஹாஃப் பக்கம் 209 பாகம்3)

அஷ்ஷெய்கு வலியுல்லாஹ் தெஹ்லவீ (ரஹ்) கூறு கிறார்கள்: துஆக்கள் அனைத்தும் குர்ஆனின் எழுத்து களின் ஸ்தானத்தில் உள்ளன. எவர் அதை ஓதுகின் றாரோ வாக்களிப்பட்ட தவாபை கொண்டு ஜெயம் பெறுவார். இந்த திக்ருகளை பர்ளு தொழுகைப்பின் வழக்கமாக தொழப்படும் ஸுன்னத்திற்கு முன் ஓதுவது தான் சிறந்தது. ஏனெனில் சில திக்ருகள் (பர்ளுக்குப் பின்தான் ஓத வேண்டும் என்ற) தெளிவான ஆதாரத் துடன் வந்துள்ளன.

மக்ரிபு, ஸுப்ஹு வக்துகளில் பர்ளு முடிந்தவுடன் 'லா இலாஹ இல்லல்லாஹு லா ஷரீக்க லஹு...' என்று ஆரம்பிக்கும் துஆவை ஓதுவது. இன்னும் ஹதீது அறி விப்பாளர்கள் ரஸூல் (ஸல்) அவர்கள் தொழுகை முடிந்து ஸலாம் கொடுத்தவுடன் இந்த துஆவை மிகவும் சப்தத்துடன் கூறுவார்கள் எனச் சொல்வதும், இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் தொழுகையை முடித்து விட் டார்கள் என்பதை சப்தமிட்டு சொல்லப்படும் தக்பீ ரைக் கொண்டே பின் அறிந்து கொள்பவனுயிருந்தேன் என்று சொல்வது போன்றவை நஸ் என்னும் வெளிப் படையாகவே மறுக்க முடியா ஆதாரங்கள் ஆகும்.

சில ஹதீதுகளின் வெளிப்படையான பொருளின்படி மக்ரிபுக்குப்பின் துஆ ஓதுவதை அமல்படுத்தலாம் என்ப தாகும். ஆயிஷா (ரலி) அவர்களின் அறிவிப்பு—இது பல

கருத்துகள் கொள்ளும், அதில் தொழுகையில் உட்கார்ந் திருப்பது போல உட்காரும் அளவைக் குறிக்கும்; மேலும், வலது, இடது ஜமாஅத்தின் பக்கம் திரும்பி உட்கார்ந்து கொண்டு ஓதப்படும் திக்ருகள் தொழுகை யைச் சார்ந்தவையல்ல என அறியவும் ஏதுவாகும்; சில சமயம் ஓதி, சில சமயம் விட்டு சில சமயம் இதல்லாத வேறு துஆக்கள் ஓதுவது இந்த துஆவே (அதாவது, 'அல் லாஹும்ம அன்தஸ் ஸலாம்...') பர்ளுக்குப்பின் கடமை யாக்கப்பட்ட ஒன்றில்லை என அறிவிப்பதற்காகவே.

ஆக, இவ்வாறு தொழுகைக்குப்பின் துஆ ஓதுவது ரஸூல் (ஸல்) அவர்களிடத்தில் ஒரு முறையோ, இரு முறையோ தொடர்ந்தோ இல்லாமல் அதிகமான தடவை நிகழ்ந்துள்ளன. மேலும் வழக்கமான ஸுன்னத்களை வீட் டில் தொழ வேண்டுமென சொல்லியிருப்பதே மேலே சொல்லப்பட்டவற்றிலுண்டான இரகசியமாகும். அதா வது பர்ளு தொழுகைக்கும் ஸுன்னத்துக்குமிடையில் அதே இனமல்லாத ஒன்றினால் பிரிவினை இருக்க வேண்டுமென் பதே. மேலும் இந்தப் பிரிவு சாதாரண அறிவுடையோ ரும் பார்த்தவுடன் தெரிந்து கொள்ளும் படியானதாய் இருக்க வேண்டும். ''யார் பர்ளுக்குப் பின்னால் தொழ நாடுகின்றாரோ, அவர் சிறிது நேரம் உட்காரவும். ஏனெ னில், அஹ்லுல்—கிதாப்—யஹூதி நஸாராக்கள் (யூத, கிறிஸ்துவர்கள்) அழிந்து போனதெல்லாம் அவர்களின் தொழுகைக்கிடையில் சற்று அமர்ந்து பிரிவினை செய் யாததால் தான்'' என்ற உமர் (ரலி) அவர்களின் சொல் தான். இதைக் கண்ணுற்ற ரஸூல் (ஸல்) அவர்கள் உமர் (ரலி) அவர்களை நோக்கி ''அல்லாஹ் உமக்கு நேர் படுத்திவிட்டான்,'' எனப் புகழ்ந்தார்கள். மேலும் ரஸூல் (ஸல்) அவர்கள் ஸுன்னத் தொழுகைகளை வீட் டில் தொழுது கொள்ளுங்கள் என்பதும் பர்ளுக்குப்பின் சற்று பிரிவு வேண்டுமென்பதின் பாற்பட்டதே.

எனவே திக்ருகள், விர்துகள் ரஸூல் (ஸல்) அவர் களிடமிருந்து வந்துள்ள துஆக்களையும் பர்ளுத் தொழு

கைக்குப்பின் சேர்ந்ததாக ஓதுவதே ஆதாரமானதும், மிகவும் சரியான சொல்லுமாகும். பர்ளுக்குப்பின் துஆ ஓதுவது பஸ்லுஸ் ஸமானீ-என்னும் நேரத்தின் பிரிவினை பர்ளுத் தொழுதபின் சுன்னத் தொழ மாறி 'வீட்டிற்குப் போவது) நிற்பது பஸ்லு மகானீ—என்னும் இடம் மாறு படாமல் உண்டான பிரிவினையாயிருப்பது போல். (பஸ்லு மகானீ ஆகுமென்றுகிவிட்டால் பஸ்லுஸ் ஸமானீ ஆகுமாவிடும் என்பதே பொது விதி) அல்லாஹுதஆலாவே மிக அறிந்தவன்.

(ஷப்பீர் அஹமது உதுமானீ முஸ்லிம் ஷரீபுக்கு எழுதியுள்ள பத்ஹுல் முல்ஹிம் பக்கம் 177 பாகம் 2)

ஹதீதுடைய துறையே இஸ்லாத்தில் பின்பற்ற மிகவும் உயர்வான அமல் பிரிவு என நினைத்து, முடிவில் இஸ்லாத்திற்கு மாறுபட்ட கூட்டங்களின் கூற்றுகளெல்லாம் சரியான ஆதாரம் என்ற தீர்ப்புக்கு வந்த மதமீறிகளின் பாதுகாவலராக உலாவந்த ஷப்பீர் அஹமதே பர்ளு தொழுகைக்குப்பின் துஆ ஓத வேண்டுமென்பதை ஏற்று, அதற்குண்டான ஆதாரங்களை தெளிவுபட நம் முன் வைத்துள்ளார்; ஸுன்னத் வல் ஜமாஅத்தே ஹதீதின்படி அமல் செய்ய வழிவகுக்கப்பட்டதீனுல்இஸ்லாம் என்பதைஒப்புக்கொண்டு நம் உலமாக்களின்முடிவுதான் ரஸூல்(ஸல்)அவர்களை முழுக்க முழுக்கப் பின்பற்றி உள்ளதுஎன அவரேமதிப்புரை தந்துள்ளார். வஹ்ஹாபிகள் அவர்களுடைய இதர கிளை நிறுவனங்களின் ஏக கால மொத்த ஏஜண்டுகள் இஸ்லாத்தை விட்டும் எவ்வளவு தூரம் அப்பாற்பட்டுப் போய்விட்டவர்கள், இவர்களை பின்பற்றுவது ஈருலகிலும் பேரழிவுக்கு வழிவகுக்கும் என்பதற்கு இதற்குமேல் ஒரு சான்று வேண்டுமா? மேலும், இவர்களது பணபலத்தால் விலைபோன ஆலிம்கள், அதிமேதாவிகள், லோகாதயப் பிரியர்கள் ஸுன்னத் வல் ஜமாஅத்தின் வேடம் பூண்டு, இது போலுள்ள மார்க்க அனுஷ்டானங்களை—இல்லையென அவதூறுய்

சிமாமித்து ருகூவில் நிறுத்தப்பட்டம்போல் ஸஜ்தாவில் ஸப்பட்டு ஓதிய — அமிந்த — நிகழ்ச்சிகள் ஏராளம்.

•

# 6. பர்ளுத் தொழுகைக்குப்பின் துஆ ஓதலாமா?

மேற்சொன்ன விஷயங்களில் ஹனபி, ஷாபிஈ மத்ஹபுகளுடைய இமாம்களின் தீர்ப்பை, ஷப்பீர் அஹ்மது எடுத்தெழுதியுள்ளதைக் கண்டோம். இவரது பேச்சு, இவரைப் பின்பற்றிய கூட்டத்தினருக்கு பதிலாக அமையுமே தவிர, நமக்கு ஆதாரம் நம் இமாம்கள் சொல்வதுதான் என்ற நியதியைப்பின்பற்றி இஸ்லாத்தின் — ஸுன்னத் வல்ஜமாஅத்தின் நான்கு மத்ஹபுகளிலும் பர்ளுத் தொழுகைக்குப்பின் துஆ ஓதுவது ஆகுமென தீர்ப்புச் செய்துள்ளதைக் காண்போம்.

ஹனபி மத்ஹபில் பர்ளுக்குப்பின் துஆ ஓதி முடித்த பின் பிந்திய ஸுன்னத் தொழுது விட்டு, ரஸூல் (ஸல்) அவர்கள் குறிப்பிட்டுள்ள தஸ்பீஹ், திக்ரு, ஆயத்துல் குர்ஸி போன்றவற்றை ஓதி தம் நாட்டதேட்டங்களை அல்லாஹுதஆலாவிடம் கேட்பார்கள். ஷாபிஈயாக்கள் தொழுகைக்குப்பின் என்றிருப்பது பர்ளுத் தொழுகைக்குப்பின் அமைந்து தஸ்பீஹ், திக்ரு ஓதி துஆச்செய்த பின் பிந்திய ஸுன்னத் தொழ வேண்டுமெனத் தீர்ப்புச் செய்துள்ளனர். பர்ளுக்குப் பின் தஸ்பீஹ், திக்ரு, துஆ ஓதுவதும் ஸுன்னத். தொழுகையும் ஸுன்னத்தாக இருப்பதால், இவற்றை ஓதுவதால், அதன்பின் தொழும் ஸுன்னத்துக்கு அதன் ஸ்தானம் கிடைக்காமல்

என்று கூறுவதற்கு ஆலூஸீ பக்தாதீ அவரது தப்ஸீரில் பக்கம் 172, பாகம் மூன்றிலும், திருக்குர்ஆனின் இதர விரிவுரையாளர்களும் இந்த ஆயத்திற்கு "தொழுகையை நீர் முடித்தீரானால் துஆவை மிகவும் பூணிப்புடன் ஓதுவீராக" என்றே விரிவுரை செய்கின்றனர். இந்த விளக்கம் தாபிஈன்களில் மிகப்பெரும் கலா வல்லுனர்களான கதாதா (ரலி) ளஹ்ஹாக் (ரலி) போன்றோர் செய்துள்ள விளக்கவுரைகள்தாம். இவ்வாறே இமாம் புகாரீ (ரஹ்) அவர்கள் தொழுகைக்குப்பின் துஆ ஓதுவதை விவரிக்கும் பாடம் என்ற தலைப்பின் கீழ் தங்களின் நம்பகமான ஹதீது திரட்டான புகாரீ ஷரீபில் எடுத்துரைக்கிறார்கள்.

ஹஸன் பஸரீ (ரலி) அவர்களின் அண்டை வீட்டில் விறகு எடுத்து விற்கும் ஒருவர் வாழ்ந்து வந்தார். இவர் தொழுகையிலிருந்து இமாம் ஸலாம் கொடுத்தவுடன் வேகமாய் எழுந்து வெளியே போய்விடுவார். இதைக் கவனித்து வந்த இமாம் அவர்கள், ஒருநாள் அவர் எழுந்திருக்கும் போது அவரை நிறுத்தி, 'நீர் ஏன் தொழுதபின் சிறிது நேரம் உட்கார்ந்திருக்கக்கூடாது! உமக்கு மறு உலகில் ஒரு தேவையும் இல்லாவிடினும், இவ்வுலகில் ஒரு தேவையுமில்லையா?' என அறிவுறுத்தி, 'தொழுதபின் சிறிது நேரம் அமர்ந்து உம் சுமையை நீர் சுமக்காமல் அல்லாஹ் தஆலாவிடம் அதன் பளுவை நீக்கக் கோரி (துஆ) கேட்பீராக' எனக் கூறினார்கள்.

[ஷரஹ் ஷிர்அத்துல் இஸ்லாம் பக்கம் 112]

இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்கள் தங்களின் இஹ்யா உல் உலூமில் கூறுவதாவது: முஜாஹிது (ரலி) என்னும் பேரறிஞர் சொல்கிறார்கள்: தொழுகை மிகவும் நல்ல நேரங்களில் கடமையாக்கப்பட்டுள்ளது. எனவே தொழுகைக்குப்பின் துஆ கேட்பதை பற்றிப் பிடித்துக் கொள்ளுங்கள். [இஹ்யா—பக்கம் 210 பாகம் 1]

அபூ ஸுலைமான் தாரானி (ரலி) சொல்கிறார்கள்: ஏவருக்காவது ஏதேனும் தேவைகள் இருப்பின், தொழ

வும்; அதன்பின் அவரது ஹாஜத்தை அல்லாஹ் தஆலா விடம் கேட்கவும். பின்பு ஸலாவாத்தைக் கொண்டு (துஆவை) முடித்துக்கொள்ளவேண்டும்.

[இஹ்யா—பக்கம் 212 பாகம் 2
இத்திஹாஃப் பக்கம் 28 பாகம் 5]

பர்ளுத் தொழுகை முடிந்தபின் ஸுன்னத்துக்கு முன் துஆவை முற்படுத்தி வைப்பதே நம்மிடத்தில் (ஹனபி மத்ஹபில்) ஸுன்னத்தாகும் என 'பஹ்ருர் ராயிக்' நூலாசிரியர் கூறுகிருர்கள்.

இமாம் பகாலீ (ரஹ்) அவர்களின் அறிவிப்பின்படி: பர்ளுத் தொழுகைக்குப்பின் ஸுன்னத் தொழுவதற்கு முன் துஆ ஓதுவதைப் பேருபகாரமாய் எடுத்துக் கொள் ளுங்கள் என்றும், மற்றவர்களின் அறிவிப்பின்படி துஆக் கள், வளீபாக்களை ஸுன்னத்திற்குப்பின் வைத்துக் கொள்ளுங்கள் எனக் கூறப்பட்டுள்ளது. இதுவே நம் காலங்களில் பிரபல்யமாய் அமல் நடத்தப்பட்டு வரு கின்றது. பஹ்ருர் ராயிக் இமாம் ''நம்மிடத்தில்'' எனக் கூறியிருப்பதிலிருந்து இதுவே ஹனபீ மத்ஹபினர் பின் பற்றக்கூடிய அமல் எனப் பெறப்படுகின்றது. ஏனெனில் பஹ்ருர் ராயிக் நூலாசிரியர் தங்கள் இமாமை அதாவது இமாமுல் அஃலம் அபூ ஹனீபா (ரலி) அவர்களைப் பற்றி மிகவும் தெரிந்தவர்கள்.

[ஷரஹ் ஷிர்அத்துல் இஸ்லாம்—பக்கம் 115]

தொழுகைக்குப்பின் நல்லவற்றை அருளும்படி அல்லாஹு தஆலாவிடம் இமாம் துஆக் கேட்பார்; திக்ருகள், விர்துகளை நமது காலத்தில் இமாம்கள் உறுதி செய்திருப்பது போல் (ஸுன்னத்துக்குப் பின்) ஓதுவார்.

[ஷரஹ் ஷிர்அத்துல் இஸ்லாம் பக்கம் 116]

மேலும், அதே ஷிர்அத்துல் இஸ்லாம் பக்கம் 116-ல் இமாமுனா அபூ ஹனீபா (ரலி) அவர்கள் கூறுவதாய் இமாம் அபுல்லைது ஸமர்கந்தி (ரஹ்) அவர்கள் முகத்தமா

வின் விரிவுரையில் அறிவிப்பதாவது: இமாம் துஆச் செய்வாரேயானால், அவரது முகத்தை ஜமாஅத்தின் பக்கம் திருப்பிக் கொள்ளவேண்டும். இதுவே தற்காலத்தில் பழக்கத்தில் உள்ள துஆவுக்குத் தெளிவான ஆதாரம் என்பது அறிவுடையவர்களுக்குத் தெரியும்.

[பதாவா அபீ லைது பக்கம் 13]

ரஸூல் (ஸல்) அவர்களின் ஸஹாபாக்களில் ஒருவர் தொழுது முடித்ததை அறிவிப்பார், அதன்பின் கீழ்க்கண்ட துஆவை ஓதச் சொல்வார்கள்: ''இறைவா! எனக்கு பாவமன்னிப்பருள்வாயாக! இன்னும் கிருபை செய்வாயாக! இன்னும் என்னை நேர்வழிப்படுத்துவாயாக! மேலும் உடல் சுகத்தைத் தந்தருள்வாயாக.'' என்பதே. [பதிவு: முஸ்லிம் அறிவிப்பவர்: அபூ மாலிக்கில் அஷ்ஜயீ (ரலி) மிஷ்காத் பக்கம் 210]

ஸஹாபி அபூபர்ரா (ரலி) சொல்வதாவது: என் தந்தை (பர்ளு) தொழுகைக்குப்பின், ''இறைவா! நான் குஃப்ரை விட்டும் மேலும் மிடுமை, கப்ரின் வேதனை ஆகியவற்றை விட்டும்உன்னிடம் காவல்பாடு தேடுகிறேன்,'' என்ற துஆவை கேட்பவர்களாயிருந்தார்கள். பின் நானும் இதனையே ஓதுபவனாகயிருந்தேன். இதைச் செவியுற்ற என் தந்தை, 'என்னருமை மகனே! இதை யாரிடமிருந்து கற்றுக் கொண்டாய்?''' என வினவினார்கள். அதற்கு நான் 'உங்களிடமிருந்துதான்'என பதிலிறுத்தேன். அதற்கு என்தந்தை, 'ரஸூல் (ஸல்) அவர்கள் தொழுகைப்பின் இவ்வாறு ஓதுபவராயிருந்தார்கள்' என கூறினார்கள். [திர்மதீ, மிஷ்காத் 210]

அன்வர் ஷாஹ் கஷ்மீரீ அவர்கள் ஸஹீஹ் புகாரீயின் விரிவுரையான ''பைளுள் பாரீ''யில் நாம் இன்று ஓதுவது போல் பர்ளுத் தொழுகைக்குப் பின் துஆ ஓதுவது மார்க்கத்தில் அதற்கு மூல ஆதாரமில்லை என்னும் பித்அத்தின் வகையைச் சார்ந்ததல்ல. யாருக்கு அல்லாஹுதஆலாவிடம் ஹாஜத் நிறைவேறுமென்ற நாட்டம்

உள்ளதோ, அவர் தொழுது ஜமாஅத்துடன் துஆ கேட் கட்டும். தேவையில்லாதவன் கேட்கவேண்டாம்.'' எனக் குறிப்பிட்டுள்ளார்கள்.

ரஸூல் (ஸல்) அவர்கள் பஜ்ர் தொழுதபின் கேட்கும் துஆ மிஷ்காத் பக்கம் 212-ல் வந்துள்ளது.

ரஸூல் (ஸல்) அவர்கள் மக்ரிபு பர்ளு தொழுதபின் யாரிடமும் பேசுவதற்குமுன் 'அல்லாஹூம்ம அஜிர்னு மினன்னர்...'—இறைவா! எங்களை நரகத்தைவிட்டும் காத்தருள்வாயாக என ஏழு தடவை கேட்பவர்களாயிருந்தார்கள். இதே போல் ஸுப்ஹு தொழுத பின்னும் துஆ செய்வார்கள் என ஹாரிது அவர்களின் தந்தை மூலம் அறிவிக்கிறார்கள்.

முஅத்தா, புகாரீ போன்ற தொகுப்புகளில் தொழுகைக்குப் பின் ஓதும் துஆ சம்மந்தமாய் அறிவிக்கும் இஸ்னத் என்னும் அறிவிப்பாளர் தொடரில் அப்துல்லா ஹிப்னு ஹத்தாது (ரலி) அவர்கள் அறிவிக்கும் ஹதீதில்: ரஸூல் (ஸல்) அவர்கள் தொழுது முடித்து ஸலாம் கொடுத்தவுடன் பனூ தமீம் கிளையைச்சார்ந்த அரபிகள் (ஸஹாபாக்கள்) அல்லாஹு தஆலாவே எங்களுக்குப் பொருளையும் பிள்ளைகளையும் தந்தருள்வாயாக என பிராத்திப்பார்கள். [பக்கம் 43—முஅத்தாவுக்கு இமாம் ஜர்கானீ (ரஹ்)-ன் விரிவுரை பாகம் 1]

ரஸூல் (ஸல்) அவர்கள் பர்ளுத் தொழுகைக்குப் பின்

لَا إِلَٰهَ إِلَّا اللَّهُ وَحْدَهُ لَا شَرِيكَ لَهُ لَهُ الْمُلْكُ
وَلَهُ الْحَمْدُ وَهُوَ عَلَىٰ كُلِّ شَيْءٍ قَدِيرٌ ،
اَللَّهُمَّ لَا مَانِعَ لِمَا أَعْطَيْتَ وَلَا مُعْطِيَ
لِمَا مَنَعْتَ وَلَا يَنْفَعُ ذَا الْجَدِّ مِنْكَ الْجَدُّ ○

என்ற துஆவை ஓதுவார்கள். (பதிவு: புகாரீ, முஸ்லிம் அறிவிப்பவர்: முகைய்யரத்துப்னு ஷுஃபா (ரலி) தைஸீரில் உஸூல் பக்கம் 70 பாகம் 2) இமாம் முஸ்லிம் (ரஹ்) ஐந்து அறிவிப்புகளில் இவ்வாறு பதிவு செய்துள் ளனர்.

[அபூதாவூது : முஸ்அப் (ரலி) மூலம்நஸஈ:
முஹம்மதுப்னு மன்ஸூர் மூலம்]

தொழுகைக்குப்பின் என அறிவித்திருப்பது ஒவ் வொரு பர்ளுத் தொழுகைக்குப்பின் எனப் பொருள் கொள்ளப்படும்.

(புகாரீயின் விரிவுரை ஐனீ பக்கம் 202 பாகம் 3)

முகைய்யரு (ரலி) அறிவிப்பிலும், ஆயிஷா (ரலி) அறிவிப்பிலும் பர்ளுத் தொழுகைக்குப்பின் என்று வரு மிடத்தில்,பர்ளுத்தொழுகை அதன்பின் ஸுன்னத் இருந் தாலும் சரி, துஆ ஓதி விட்டுத்தான் ரஸூல் (ஸல்) எழுந்திருப்பார்கள் என இமாம் முல்லா அலிய்யுல் காரீ ஹனபீ—மிர்காத் பக்கம் 18, 19-பாகம்-2 ல் விபரிக் கிறுர்கள்.

ரஸூல் (ஸல்) அவர்கள் பர்ளுத் தொழுகைக்குப் பின்னும் ஸுன்னத் தொழுகைக்குப் பின்னும்

اَللّٰهُمَّ اغْفِرْلِيْ خَطَايَايَ كُلَّهَا اَللّٰهُمَّ اهْدِنِيْ
لِصَالِحِ الْاَعْمَالِ وَمَحَاسِنِ الْاَخْلَاقِ فَاِنَّهُ
لَايَهْدِيْ لِصَالِحِهَا وَلَايَصْرِفُ سَيِّئَهَا اِلَّا اَنْتَ○

என்று ஓதுவார்கள்.

(ஐனீ பக்கம் 304 பாகம் 3)

பர்ளுத் தொழுகைக்கு பின் செய்யும் திக்ரின் சிறப்பை இந்த ஹதீது தெரிவிக்கின்றது; ஏனெனில்

அந்த நேரம் துஆ ஏற்றுக் கொள்ளப்படும் என ஆதரவு வைக்கப்படும்.

(ஐனீ பக்கம் 201 பாகம் 3 பத்ஹுல் பாரீ பக்கம் 225 பாகம் 2)

ரஸூல் (ஸல்) அவர்களின் தொழுகையை கவனித்துக் கொண்டிருந்தேன்; அவர்களின் நிலை, ருகூஉ, சிறு நிலை, ஸஜ்தா, சிறு இருப்பு, ஸலாம், அதற்குப்பின் எழுந்து செல்வது எல்லாம் ஒன்றுக்கொன்று சமமாயிருந்தன. (பதிவு : முஸ்லிம்; அறிவிப்பவர் : பர்ரா இப்னு ஆஸிப் (ரலி)

ஸலாம் கொடுத்தபின் துஆக் கேட்பது முஸ்தஹப் பாகும். இமாம் மிஹ்ராபை விட்டு மாறி நிற்க நாடுவாராகில் துஆ, திக்ருக்காக மனிதர்களை முன்னோக்கி நிற்பார்.

(ஐனீ பக்கம் 189 பாகம் 3, பத்ஹுல் பாரி பக்கம் 228 பாகம் 2)

தொழுகைக்குப்பின் திக்ரு, துஆ ஓதுவதும், இவ்விரண்டையும் துவங்கும் முன் மூன்று தடவை இஸ்திஃபார் செய்வதும் ஸுன்னத்தாகும்.

(இத்திஹாஃப் பக்கம் 105 பாகம் 3)

ஹனபீ மத்ஹபின் பத்வா கிதாபுகளில், இன்று உலகமனைத்திலும் ஒப்புக் கொள்ளப்பட்டு சகல தரப்பினரிடமும் நம்பகமான கிரந்தம் என ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ள 'துர்ருல் முக்தாரி'ல் பர்ளுத் தொழுகைக்குப்பின் துஆ, திக்ரு ஓதுவது ஸுன்னத் என்பது ஆணித்தரமாய் எடுத்துரைக்கப்படுகின்றது.

அதாவது : பர்ளுத் தொழுகைக்குப்பின் ஓதும் துஆவை, ''அல்லாஹும்ம அன்தஸ் ஸலாம்...'' என்ற துஆவின் அளவுக்குமேல் பிற்படுத்தி ஓதுவது மக்ரூஹ்

ஆகும். இமாம் ஹல்வானீ துஆவை, விர்துகளை பர்ளுக் குப்பின் ஓதுவது பிழையில்லை என்பதனை இமாம் இப்னுல் ஹுமாம் தெரிவு செய்துள்ளனர். மக்ரூஹ், லா பஃஸ (பிழையில்லை) இவ்விரு சொற்களையும் இமாம் கல்பீ ஆய்ந்து மக்ரூஹ் என்பது ஜாயிஸ் என்னும் ஆகுமானது என்றதின் பக்கம் சேர்ந்த மக்ரூஹ் தன்ஜீஹ் என விவரித்து மக்ரூஹ், பிழையில்லை என்ற இரண்டு தீர்ப்பையும் இணைத்துள்ளனர். எனவே ஹனபீ மத்ஹபில் (பர்ளுக்குப்பின்) துஆ ஓதுவதில் எந்த இமாம்களுக்கிடையிலும் அபிப்பிராயப் பேதமில்லை. எனினும் நான் இவை பர்ளுக்குப்பின் குறைவான நேரமே இருக்க வேண்டுமெனக் கருதுகிறேன்.

இன்னும் ஆயத்துல் குர்ஸீ, குல்அவூது பிரப்பில்பலக், குல்அவூது பிரப்பின்னாஸ் (தஸ்பீஹ்கள்) 33 தடவை ஓதும் தஸ்பீஹ்கள், லாயிலாக இல்லல்லாஹு 1 தடவை ஓதி 100 ஆக தஸ்பீஹ் முடித்து ஸுப்ஹான ரப்பிக ரப்பில் இஸ்ஸத்தி அம்மா யஸிபூன் என்ற துஆ உடன் முடிப்பதே முஸ்தஹப் ஆகும்.

[துர்ருல் முக்தார் பக்கம் 79 பாகம் 1
(இந்தியப் பதிப்பு)]

இவ்விரிவுரையில் மேற்சொன்ன விஷயங்களைத் தெளிவுற எழுதி, பர்ளுத் தொழுகைக்கு பின்னால் பேசுவது ஸுன்னத்தை விழ வைத்து (கடமையை விட்டு நீக்கி) விடாது, எனினும் தவாபைக் குறைக்கும் என்கிறார்கள். பேச்சே ஸுன்னத்தை விழவைக்காது என்றால், விர்துகள் எப்படி ஸுன்னத்தைத் தடுக்கும். ஆக (துஆ) விர்துகளை ஓதுவது மிகவும் உயர்வானதாகும்.

மேலும் பர்ளுத் தொழுகைக்குப்பின் துஆக் கேட்பது அல்லாஹு தஆலாவிடம் மிகவும் பொருத்தத்துடன் ஏற்றுக் கொள்ளப்படும்.

(தஹ்தாவீ பக்கம் 232, 233 பாகம் 1
ஷாமீ—ரத்துல் முக்தார் பக்கம் 371 பாகம் 1)

மேற்கூறப்பட்ட ஆதாரங்கள் அனைத்தும் ஹனபீ மத்ஹபின் இமாம்களால் தீர்வு செய்யப்பட்டவையாகும். ஸுன்னத் வல் ஜமாஅத்தினரால் ஏகோபித்த முடிவில் ஆகுமாக்கப்பட்ட அமலுமாகும். ஹனபீ மத்ஹபின் முடிவை விரிவாய்ப் பேசுவதற்குக் காரணம் இன்று தோன்றியுள்ள புதிய கூட்டத்தினர் சிறிய புத்தியில் ஹனபீ மத்ஹபில் பர்ளுத் தொழுகைக்குப்பின் துஆ ஓதுவது கூடாது என்றுள்ளது; இவ்வாறிருக்கும்போது நீங்கள் ஓதுவது உங்கள் மத்ஹபின் படியே மீறின செயலாகும் என வீண்வாதம் செய்வதினால்தான். எனவேதான் ஹனபீ மத்ஹபின் தெளிவான முடிவை, திடமான தீர்ப்பை, ஆணித்தரமான செயலை தெரியப்படுத்த வேண்டிய அவசியம் உண்டானது. உயிரிலும் மேலான நமது மத்ஹபின் பெயரைச் சொல்லியே மக்களை வழிகெடுக்க முயலும் எத்தர்களின் பொய்க் கூற்றை முறியடித்து உண்மை நிலையைத் தெளிவுபடுத்தவே நம் ஆதாரங்கள் முன் வைக்கப்பட்டுள்ளன.

மாலிக் மத்ஹபின் இன்றைய கால கட்டத்தில் அமலில் உள்ளதும் அந்த மத்ஹபின் ஆதாரப் பூர்வமானதும், பத்வா கிதாபுமான கிஃபாயத்துத் தாலிப், அதன் விரிவுரைகளில் பர்ளு தொழுகைக்குப்பின் துஆ, திக்ரு ஓதுவதின் முக்கியத்துவத்தையும், அவசியத்தையும் மாலிக் மத்ஹபின் அனுஷ்டானங்களில் பிரதானமானவற்றில் ஒன்றுயிருப்பதை அந்த மத்ஹபின் இமாம்களே விளக்கியிருப்பது கவனத்துக்குரியது.

இப்னு நாஜீ மாலிகீ (ரஹ்) கூறுகிறார்கள்: நம் நாடான ஆப்ரிக்காவில் பர்ளுத் தொழுதபின் துஆ ஓதுவதே வழக்கமான அமலாய் நிலையாய்ச் செயல்பட்டு வருகின்றது. நான் சந்தித்த மாலிக் மத்ஹபின் இதர இமாம்கள் இதுவே சரியானதெனக் கூறினார்கள். பொதுப் படையாய், துஆக் கேட்க வேண்டுமெனத் தூண்டக் கூடிய விஷயங்கள் (மார்க்கத்தில்) அநேகம் வந்துள்ளன. அல்லாஹு தஆலா குர்

ஆனில் என்னிடம் துஆக் கேளுங்கள், உங்களுக்கு வழங்கு கிறேன் என்றும், நீங்கள் அல்லாஹ்விடம் துஆச் செய்ய வில்லையானல் உங்களை என் ரப்பு விட்டு வைத்திருக்க மாட்டான் என (நபியே நீர்) கூறுவீர்களாக'' என்றும் சொல்லி நம்மைத் தூண்டியுள்ளான்.

மாலிக் மத்ஹபின் இமாம்களான இப்னு அரபா (ரஹ்), கைரினீ (ரஹ்) போன்ருேர்களின் சொல்லை சிலர் எடுத்து பர்ளுக்குப்பின் துஆ ஓதாமலிருப்பதற்கு ஆதார மாய்ப்பேசுவது தவருனதாகும். அவ்விருவரும் பர்ளுக்குப் பின் ஓதும் துஆ தொழுகையின் சுன்னத்—சிறப்பொழுக் கங்களில் சேர்ந்தது என்று சொல்லப்படுவதை மறுத்துக் கூறினர்களே தவிர துஆ ஓதக்கூடாது எனக் கூறவில்லை; மேலும் அவ்விருவர் சொல்வது போல் தொழுகையின் சிறப்புகளில் துஆ சேர்ந்தது அல்ல என்ருகிவிட்டால், துஆ ஓதுவதின் சிறப்பு அப்படியேதான் உள்ளது; மேலும் துஆ மார்க்க சம்பந்தமான இபாதத்தாகும். ஷரீஅத்தில் அதன் சிறப்பும், உயர்வும் அறியப்பட்ட ஒன்றே (ஆகையால் பர்ளுக்குப்பின் துஆ ஓதுவதும் எவ் வகையிலும் மறுக்கப்படமாட்டாது);

[அலீ ஸயீதில் அல் அதவி மாலிகீ (ரஹ்) எழுதியுள்ள கிபாயத்துத் தாலிப்—விரிவுரை பக்கம் 271 பாகம் 1]

உமர் (ரலி) அவர்கள் பர்ளுத் தொழுதபின் துஆ கேட்காமல் எழுந்து சென்ற ஸஹாபியைப் பிடித்து இழுத்து உட்கார வைத்து, பர்ளுடன் நபிலைச்சேர்க்காதே என்றுரைத்ததைக் கண்ட எம்பெருமானர் (ஸல்) அவர் கள் 'உமரே! நேர் பட்டீர்; அல்லாஹ் உமக்கு நேர்பட் டுள்ளான்.' எனச் சொன்னது ஸுனனு அபீ தாவூது என் னும் ஹதீதுத் தொகுப்பில் வருவதால் பர்ளுத் தொழு கைக்குப் பின் நபிலைக் கொண்டு பிரிக்காமல் திக்ரு செய் வது முஸ்தஹப்பாகும். மேற்கண்ட திக்ருகள் ரஸூல் (ஸல்) அவர்களிடமிருந்து கேட்கப்பட்ட வாசகங்களாய் இருத்தல் வேண்டும்;

பர்ளுத் தொழுகைக்குப்பின் ஓதும் திக்ரை அதற்குப் பிந்தியது என்பதை விட்டும் பிரிக்கக் கூடாது என்பது. அவ்வாறு பிரிவினை ஏற்படுமானால் தொழுகைக்குப்பின் ஓதக்கூடியது என்பதை மறுக்க முடியாத அளவு இருக்கும் வரை பிரிவு செய்யலாம், துஆ ஓதலாம் என்பதும் தவறல்லாததுமாகும். மேற்கண்ட பிரிவினை மறதி போலுள்ள நிலையில் நீண்ட நேரமாகி விட்டாலும் தவறில்லை. ஆனால் இதையே வம்பாக (பிரிவினை) செய்தால், திருப்பி துஆ ஓதுவது ஷரீஅத்தின் வரம்புகளில் (பர்ளுக்குப் பின் ஓதுவது என்பதில்) உட்பட்டதல்ல. (பர்ளுக்குப் பின் துஆ ஓதாமல் வம்பாக வெறுமனே நீண்ட நேரம் உட்கார்ந்தால் எழுந்து நடந்து, உலாவி, பேசிய பின் துஆச் செய்தால் அது பர்ளுக்குப்பின் ஓதும் துஆ வாகாது) எனினும் துஆ, தஸ்பீஹ், திக்ரு செய்ததின் தவாபு கிடைக்கும். ஷரஹ் வரையறுக்கப்பட்ட திக்ரு அல்லாததற்கு பிற்படுத்துவதும் இது போலவே சட்டமாக்கப்பட்டு ஏவப்பட்டவையான: பர்ளுத் தொழுகைக்குப் பின் அஸ்தஃபிருல்லாஹ் என மூன்று முறை ஓதுவதும், அல்லாஹு ம்ம அன்தஸ் ஸலாம் என்ற துஆவை இதுபோல் வந்துள்ள துஆக்களை ஓதி அதற்குப் பின் திக்ரை ஓதுவது பர்ளு-திக்ரைப் பிரித்ததாக மாட்டாது. பிரிவினை என்பதும். பர்ளுக்குப்பின் ஓதும் திக்ரு, துஆவின் மகத்துவத்தைத்தடுப்பதும் (இல்லாமலாக்குவதும்) ஏவப்படாத தனிப்பட்ட பேச்சும் மனிதர்களின் தேவைகளும் தான். மலம், ஜலம் கழிக்கச் செல்லுதல், தாகத்திற்குத் தண்ணீர் அருந்த எழுந்துபோய் நீண்டநேரமாகுதல், இதரசுற்றுப்புறத்தொடர்பால் உண்டாகும் இடையூறுகள் ஆகியவைதான் பர்ளு அதன்பின் ஓதும் துஆ திக்ரைத் தடுப்பதாகும்.

[கிஃபாயத்துத் தாலிபின் விரிவுரை
பக்கம் 248 பாகம் 1]

மக்ரிபு, பர்ளு தொழுதபின் அதற்கு பின்னால் ஓதும் திக்ருகளை முடித்தபின் நபில் தொழுவதுதான் முஸ்தஹப்பு. [கிஃபாயத்துத் தாலிப் பக்கம் 251 பாகம் 1]

எகிப்திலுள்ள உலகப் பிரசித்தி பெற்ற மார்க்கப் பல்கலைக் கழகமான ஜாமிஉல் அஸ்ஹரின் பேராசிரியர் களில் ஒருவரும், மாலிக் மத்ஹபின் பிரபலமான அஷ் ஷய்கு இம்ரானில் மாலிகி (ரஹ்), வஹ்ஹாபிகளின் அனுச்சாரங்களை சுட்டிக் காட்டியும், மார்க்க அனுஷ் டானங்களில் புகுந்துவிட்ட மூடப் பழக்க வழக்கங்களை விவரித்து இவற்றிலிருந்து விலகிக்கொள்ளும் பொருட் டும் எழுதியுள்ள நூருல் பயான் என்ற நூலில் கூறுவ தாவது:

வஹ்ஹாபிகளின் அனுச்சாரங்களில் ஒன்று பர்ளுத் தொழுகைக்குப்பின் துஆ, திக்ரு ஓதக்கூடாது என்பது: இவர்கள் தெளிவான ஷரஹைப் பின்பற்ற நஸீப் கெட்ட மூதேவிகள் இதன்பின் திக்ரு, துஆ சம்மந்தமாய் வந் துள்ள குர்ஆன், ஹதீது, இவற்றைக் கொண்டு தீர்ப் பளிக்கப்பட்ட இமாம்களின் முடிவைகளையும் எடுத் தெழுதியுள்ளனர். அதன் முடிவில்,

சகோதரனே! அல்லாஹு தஆலாவை பயந்து கொள். உன் மறுமைக்கு (அமல்களை) தயார் செய்து வைத்துக்கொள். உனது மார்க்கத்தைப் பூணிப்புடன் பேணிக் கொள். பாராமுகமாய் இருந்து விடாதே. அப் படியெனில் நலவு அடங்கலும் கிடைக்காமல் போய் விடும். வஹ்ஹாபிகளின் இக்கூற்று நல்லோர்களின் பாதையல்ல. நல்லோர்கள் என்பவர்கள் ஷரீஅத்தில் (இவர்களைப்போல்) தமக்கென்று ஒரு முடிவை வைத்துக் கொண்டு அதன் பக்கமே பேச மாட்டார்கள்.

(நூருல் பயான் பக்கம் 37,38)

மேற்கண்ட ஆதாரங்கள் மாலிக் மத்ஹப் தெள்ளத் தெளிவாய் பர்ளுக்குப்பின் துஆ ஓதுவதை ஏக மனதாய் ஒப்புக்கொண்டு அதை அவர்கள் அமல் செய்வதில் முனைந்திருப்பதைக் காட்டுகின்றது.

இனி ஷாபிஈ மத்ஹபில் பர்ளுத் தொழுகைக்குப்பின் திக்ரு, துஆவை ஓதிய பின்பே ஸுன்னத் தொழவேண்டு

மென்பதே தீர்க்கமான பத்வாவும், இன்றளவும் அமல் செய்யப்பட்டு வருவதுமாகும். இம்மஹோன்னத மத்ஹபின் பூர்வாங்க வடிவ, ஆதாரமான சட்டக் கிரந்தங்களான மின்ஹாஜ், மஹல்லீ, கல்யூபி, உமைறா, துஹ்பா, ஷர்வானீ, இப்னுல் காஸிம், பத்ஹுல் முயீன், இஆனு, பதாவா ஹதீதிய்யா, பதாவா குப்ரா, பதாவா கலீலீ போன்றவற்றில் மன உகப்புடனும், பயபக்தியுடனும் அமல் செய்யப்படவேண்டியது என உறுதிப்படுத்தப்பட்டுள்ளது. அவையாவன:

ஷரஹ் ரௌலில் : பர்ளுத் தொழுகைக்குப்பின், ஸுன்னத்திற்கு முன் துஆவையும், திக்ரையும் ஓத வேண்டும் எனக் கூறப்படுகிறது. பர்ளு தொழுதபின் ஸுன்னத் தொழுது அதன்பின் திக்ரு, துஆ செய்தால் பர்ளுக்குப்பின்—என்ற பரக்கத், மகத்துவம் கிடைக்காது. எனினும் வழக்கமாய் பர்ளுக்குப் பின் தொழும் ஸுன்னத்துகளுக்கு முன்பே திக்ரு, துஆவை ஓதுவதே மிகவும் சிறந்தது என இப்னு ஹஜர் கூறுகிறார்கள்.

இஆனு பக்கம் 185 பாகம் 1

பர்ளுத் தொழுகைக்குப்பின் ஸுன்னத்திற்கு முன் திக்ரு, துஆவை ஓதுவதே ஸுன்னத்தாகும். மஹல்லீ.

(மின்ஹாஜின் விரிவுரை கல்யூபீ 174 பாகம் 1)

பர்ளுக்குப்பின் ஓத வேண்டுமென ரஸூல் (ஸல்) அவர்களினால் அறிவிக்கப்பட்டுள்ள திக்ருகளை விடுத்து வேறொன்றை ஓதி அதன்பின் தஸ்பீஹ் போன்றவற்றை ஓதினால் பர்ளையும் திக்ரையும் பிரித்ததாகும். ஜும்ஆ பர்ளுக்குப்பின் அத்தஹிய்யாத்தின் நிலையிலேயே இவற்றை ஓத வேண்டும். அந்நிலை மாறினாலும் ஜும்ஆவிற்குப்பின் என்ற சிறப்புக் கிடையாமல் போகும்.

(கல்யூபீ (உமைறா) பக்கம் 174 பாகம் 1)

ப—5

இமாமும், ஜமாஅத்தும், தனித்துத்தொழுபவர்களும் பர்ளு தொழுது ஸலாம் கொடுத்து திக்ரு, துஆ செய்து முடித்த பின்பே எழுந்திருப்பார்கள்.

(''முக்தஸர் ஹல்ரமீ''க்கு இப்னு ஹஜரின் விரிவுரை பக்கம் 177 பாகம் 1)

ஆக ஷாபிஈ மத்ஹபினர் ஹனபிகளைக் காட்டிலும் ஒருபடி மேலே போய், திக்ருகள் அனைத்தும் ஓதி துஆ செய்தபின்பே ஸுன்னத்துத் தொழ வேண்டுமெனக் கூறி, பர்ளுக்குப்பின் ஓதும் துஆவுக்கு அதிக நேரம் ஒதுக்கித் தந்து அடியார்கள் தங்களின் தேவைகளை விரிவாய் கேட்டுப் பெற வகை செய்துள்ளனர் என்பது தெளிவாகும்.

ஹன்பலீ மத்ஹபில் இதே ஹுக்முதான் பின்பற்றப் படுகின்றது என்ற விபரத்தை இமாம் இப்னு ஹஜர் அஸ்கலானீ (ரஹ்) தங்களின் புகாரீ ஷரீஃப் விரிவுரை பத்ஹுல் பாரீயில் தெளிவாய்க் கூறியுள்ளார்கள். இதல்லாமல் ஹனபீ, மாலிகி, ஷாபிஈ ஆகிய மூன்று மத்ஹபினருக்கும் ஒத்துள்ளதுதான் ஹன்பலீ மத்ஹப். இதற்கு மாற்றமாயுள்ளவர்கள் ஹன்பலீ என தாவா செய்தாலும் ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது என இத்திஹாஃப் பக்கம் 11 பாகம் 2-ல் குறிக்கப்பட்டுள்ளது. ஆக இஸ்லாத்தின் நான்கு மத்ஹபிலும் ஆகுமான, அனுமதிக்கப்பட்ட, அமல் நடத்தப்படும் ஒன்றை மறுப்பதோ, புறக்கணிப்பதோ, ஆதாரமற்ற செயல் என்பதுதான் முஸ்லிம்களின் உறுதியாகும். இஸ்லாம் எனும் தெய்வீக மார்க்கம் அல்லாஹு தஆலாவினால் அங்கீகரிக்கப்பட்ட மார்க்கம், நான்கு மத்ஹபுகளின் மீதே ஸ்திரப்படுத்தப்பட்டு, பேணி பாதுகாக்கப்பட்டுள்ளது. இதல்லாத கூட்டங்கள் அனைத்தும் நரகம் புகுபவை என்ற கருத்தில் ரஸூல் (ஸல்) அவர்கள் அறிவித்துள்ளதை இமாம் திர்மதீ பதிவு செய்துள்ளனர். இவ்வளவு உயர்வான உன்னதமான மார்க்கம், ஒன்றை முடிவு செய்தால் அது குர்ஆன், ஹதீதுக்கு உகந்ததாக இருக்குமே தவிர நிச்சயமாய் வேறொரு கருத்துக்கு இடமிருக்காது என்

பதையெல்லாம் கருத்தில் கொண்டு, நமக்கு கிடைக்கப் பெற்ற நேர்வழியை (ஸுன்னத் வல் ஜமாஅத்தை) பேணிப்பாதுகாத்து, பூணிப்புடன் நம் வழிமுறைகளும் அதிலேயே நிலைபெற அல்லாஹுதஆலாவின் அருள் வேண்டி நிற்போமாக. ஆமீன்.

பர்ளுத் தொழுகைக்குப் பின் துஆ ஓதுவது ஆகுமாக்கப்பட்டிருப்பது தெளிவான ஆதாரங்களுடன் நிருபணமாக்கப்பட்டுள்ளது. எனினும் ஷரீஅத்தின் அமைப்பில் பர்ளுக்குப்பின் துஆ ஓதுவது சுயமே அமையப் பெற்ற ஒன்று என்பதையும் தெரிந்து கொள்தல் நலம். ஒரு சான்று:

ஸாலிஹான அமல் செய்தவுடன், பொதுவாய் துஆக் கேட்பது என்பது ஷரீஅத்தில் நிலைப்படுத்தப் பட்ட வரம்புகளில், சட்டதிட்டங்களில் ஒன்று. ஆகையால் உலமாக்கள், நல்ல அமல்கள் செய்தவுடன் துஆக் கேட்பது ஷரீஅத்தில் முக்கியமானது எனக் கூறியுள்ளனர்:

இப்ருஹீம் (அலை) அவர்களும், இஸ்மாயீல் (அலை) அவர்களும் கஃபா ஷரீபைக் கட்டி முடித்தவுடன், 'எங்கள் ரப்பே (இதை) எங்களிடமிருந்து ஏற்றுக் கொள்வாயாக; இன்னும் நீயே செவிமடுப்பவனும் அறிந்தவனுமாயுள்ளவன்.'' என்பதைக் குர்ஆன் கூறுகிறது.

மேலும் ஹதீதில், ''நோன்பு திறக்கும் போது ''இறைவா உனக்காகவே நோன்பு வைத்தேன். உன்னைக் கொண்டே ஈமான் கொண்டுள்ளேன். உன்னையே முற்றிலும் சார்ந்திருக்கின்றேன். உனது ரிஸ்க்கிலேயே நோன்பு திறக்கின்றேன். என் பாவங்களை மன்னிப்பாயாக'' என துஆக் கேட்கும்படி வந்துள்ளது.

இதையொட்டியே ரஸூல் (ஸல்) அவர்களும் ''லிஸ்ஸாஇமி இன்த ஃபித்ரிஹி தஃவத்துல் முஸ்தஜாபா''- ''நோன்பாளிக்கு, அவர் நோன்பு திறக்கும் போது செய்

யும் துஆ இறைவனால் ஏற்றுக்கொள்ளப்படுவதாக இருக்கிறது'' எனக் கூறியுள்ளார்கள்.

இதுபோலவே ஹஜ்ஜும், அதனுடைய அமல்களில் ஒவ்வொன்றையும் முடித்தவுடன் துஆ கேட்கும்படி வந்துள்ளவை: 'இறைவா! எனது ஹஜ்ஜை ஒப்புக் கொள்ளப்பட்டதாயும், (எங்கள்) முயற்சி நிறைவேற்றப்பட்டதாயும், இன்னும் பாவம் பொறுக்கப்பட்டதாயும் ஆக்குவாயாக!' என்றும்; இதேபோல் அரபா, முஸ்தலிபா, மினா, உம்ரா, இஹ்ராம் கட்டும் போதும் ஓதும் துஆக்கள் ஏராளம் வந்துள்ளன.

ஆக பொதுப்படையாகவே ஒரு அமலுக்குப்பின் துஆ ஆகுமாக்கப்பட்டுள்ளதென்றால், நமது தலையான கடமையான தொழுகைக்குப்பின் துஆ ஓதுவது ஆகுமெனத் தெரிகிறதல்லவா. ஷரஹிலேயே பர்ளுத் தொழுகைக்குப் பின் துஆ ஆகுமாக்கப்பட்டதாய் இருந்தாலும், அறிவு ரீதியிலும் ஆகுமானதே என்பதற்குத்தான் மேற் சொன்ன சான்றுகள் தரப்பட்டுள்ளன.



# 7. பர்ளுத் தொழுகைக்குப்பின் துஆவை சப்தமிட்டு ஓதலாமா?

இஸ்லாமிய முலாம் பூசிய சில பித்அத்தான பித்தலாட்டக்காரர்கள்: ''நீங்கள் சொல்வது போல் பர்ளுத் தொழுகைக்குப் பின் துஆ ஓதுவது ஆகுமென்றிருந்தாலும், சப்தமிட்டு ஜமாஅத்துடன் ஓதி 'ஆமீன்' கூறிக் கேட்பதற்கு ஆதாரம் உள்ளதா? ரஸூல் (ஸல்) இவ்வாறு சப்தமிட்டு ஓதினார்களா? நீங்கள் செய்வது போன்று செய்தார்களா?'' என்று அவர்களது அறியாத் தன்மையை வெளிச்சம் போட்டுக்காட்டுகின்றனர்.

நாம் முன் சொன்ன விஷயங்கள் அனைத்தையும் கூர்ந்து கவனித்தால், ரஸூல் (ஸல்) அவர்கள் பர்ளுக் குப்பின் துஆ ஓதியுள்ளார்கள் என்பது பொதுப்படை யாய் விளங்கும். அதில் சப்தமிட்டா, அல்லது அமைதி யாய் நங்களுக்குள் ஓதினார்களா என்பதை ஆய்வோம்.

இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் தங்களின் பர்ளுத் தொழுகையை முடித்துவிட்டார்கள் என்பதை மஸ்ஜி தில் தக்பீர் சப்தமிட்டு முழங்குவதின் மூலம் நான் அறிந்து கொள்வேன்'' என அறிவிக்கிறார்கள். மேலும் ரஸூல் (ஸல்) அவர்க்ள் தொழுகையை முடித்து விட் டால், 'லா இலாஹ இல்லல்லாஹ் வஹ்தஹு லா ஷரீக்க லஹு' என்ற துஆவைசப்தமிட்டு ஓதுவார்கள் என ஹதீ தின் அறிவிப்பாளர் ஸஹாபி தெரிவித்துள்ளார்கள்.

உஸூலுல் ஹதீதென்னும், அடிப்படை ஹதீதுகலைத் துறையில் ரஸூல் (ஸல்) அவர்கள் ஒரு செயலை ஒரு தடவை செய்தாலும், அந்தச் செயலை செய்வது ஆகும் என நமக்கு அறிவித்துத் தரவேண்டித்தான் என ஹதீது கலாவல்லுனர்கள் தெளிவுபடுத்தியுள்ளனர். பொதுப் படையாய் துஆ சம்மந்தமானதும், சப்தமிட்டு திக்ரு— தக்பீர் சொன்ன ஹதீதும், ரஸூல் (ஸல்) சப்தமிட்டு சிலசமயம் துஆக் கேட்டதும் பர்ளுக்குப்பின் துஆ சப்த மிட்டு ஓதலாம் எனத் தெளிவு செய்கிறது.

ஷரீஅத்தில் ஓர் அமல் சட்டமாக்கப்பட்டுவிட் டால், அந்த அமல் எப்படி நிறைவேற்றப்பட வேண் டும் என்ற ஷரத்துகளை முழுவதுமாய் கடைப் பிடிப்பதிலேயே அந்த அமல் பூர்த்தியாகும். பர்ளுக்குப் பின் துஆ ஓதுவது உறுதியாக்கப்பட்டுவிட்டதால், அதற்குண்டான வரைமுறை ஒழுங்குகள் கடைபிடிக்கப் பட்டே நிறைவேற்ற வேண்டும்.

பர்ளுக்குப்பின் துஆ ஓதுவது ஊர்ஜிதமாய் துஆக் கேட்பதின் ஷரத்துகளின்படி நிறைவேற்ற வேண்டுமெனு

ருகிவிட்டால், ஜமாஅத்துடனே நிறைவேற்றப்பட வேண்டுமென்றுகிறது. ஜமாஅத்துடன் ஓதக் கடமையாக்கப்பட்டது சப்தமிடாமல் ஓதினால் ஜமாஅத் கடமையாக்கப்பட்டதற்கு அர்த்தமே இல்லை. மேலும் ஜமாஅத்துடன் கேட்கப்படும் துஆ உடனே அங்கீகரிக்கப்படுவதால் இது ஸுன்னத்தாகும்.

மேலும், அவர்கள், 'ரஸூல் (ஸல்) அவர்கள் ஓதினார்களா, செய்தார்களா?' என சந்தேகிப்பது, ஸுன்னத் என்பதற்கு விளக்கம் தெரியாத விபரீத விளைவேயாகும். செய்தது என்பது ரஸூல் (ஸல்) அவர்களின் செயலை மட்டுமே ஹதீதாய் எடுத்துக்கொண்டதைக்குறிக்கிறது. ஹதீது (ஸுன்னத்) என்பது மூன்று வகைப்படும்: 1. கவ்லீ—ரஸூல் (ஸல்) அவர்கள் சொல்லியது. 2. பிஅலீ -ரஸூல் (ஸல்) அவர்கள் செய்தது. 3. ஸஹாபாக்கள் செய்ய, அதைக் கண்ணுற்ற ரஸூல் (ஸல்) அவர்கள் மறுக்காது அனுமதித்தது. இந்த மூன்றும் ஹதீதுதான். இதை விடுத்து 'பிஅலீ'யை மட்டும் பிடித்துக்கொண்டு கேட்பது ஷரீஅத்தில் மூன்றில் ஒன்றைப் பின்பற்றுவதேயாகும், எனவே இதில் முழுமையில்லை.

இன்னும், ரஸூல் (ஸல்) அவர்கள் ''என் ஸுன்னத்தையும், நேர்வழியாளர்களான என் கலீபாக்கள் (பிரதிநிதிகள்) அபூபக்ரு ஸித்தீக், உமர், உத்மான், அலீ—(ரலி-அன்ஹும்) ஸுன்னத்தையும் பின்பற்றுங்கள்,'' என ஆணையிட்டு இருப்பதும்; ''நிச்சயமாக, என் ஸஹாபாக்கள் நட்சத்திரம் போன்றவர்கள், அவர்களில் யாரைப் பின் பற்றினாலும் நீங்கள் நேர்வழி பெறுவீர்கள்,'' என்று உரிமை கொடுத்துள்ளதும்; 'என் காலமும், எனக்கு அடுத்து வருவதும், அதற்கு அடுத்து வரும் காலமும் காலங்களில் சிறந்தவை' எனத் தெரிவித்து, அவர்களுக்கு பின்னால் வரும் இரண்டு தலைமுறைகளின் அறிஞர்களின் நடத்தைகள் அனைத்தும் பின்பற்றத் தக்க சுன்னத்துகள் என விளக்கி, நம்மை ஸஹாபாக்கள் அதன்பின் இரண்டு தலைமுறையினர்களின் நடவடிக்கை

களைப் பின்பற்றச் செய்து ஷரீஅத்தின் விஸ்தீரணத்தை விளங்க வைத்துள்ளனர்.

அல்லாஹு தஆலா குர்ஆனில், ''எனக்கு வழிப் படுங்கள்; இன்னும் ரஸூலுக்கு வழிப்படுங்கள், இன்னும் உங்களில் காரியம் உள்ளவர் (இமாம்)களுக்கும் (வழிப்படுங்கள்),'' என்று ஆணையிட்டு, இமாம்கள், மஷாயிகுகளின் சொல், செயல், அனுமதித்தவற்றைப் பின்பற்றச் சொல்லி மார்க்க அறிஞர்களின் 'இஜ்மாஉ' என்னும் ஏகோபித்த முடிவைப் பின்பற்றும்படிக் கூறி மேற் கூறப்பட்ட அனைத்து ஏவல்களையும் பின்பற்றுவதே ரஸூல் (ஸல்) அவர்களின் ஸுன்னத்தைப் பின் பற்று தலாகும் என நமக்கு குர்ஆனும், ஹதீதும் அறிவுறுத்தி யுள்ளன. ஷரீஅத் இவ்வாறிருக்க, ரஸூல் (ஸல்) அவர்களின் செயலை மட்டும் நொண்டிச் சாக்காய் சுட்டிக் காட்டினால், இவர்கள் மார்க்கத்தைவிட்டும் எவ்வளவு தூரம் அப்பாற்பட்டுப் போய் நின்று கொண்டு வாய் ஜாலம் மூலம், அவர்களை மார்க்கவாதிகள் எனப் போலி யாய்க் காட்டிக்கொள்கிறார்கள் என்பது விளங்கும்.

ரஸூல் (ஸல்) அவர்கள் பர்ளுத் தொழுகைக்குப் பின் துஆ ஓதியுள்ளார்கள் என்று தெளிவான ஆதாரத் துடன் நிரூபணமாகிவிட்டதால், நாமும் பர்ளுக்குப் பின் துஆ ஓதுகின்றோம், ஆனால்,சப்தமிட்டு ஓத மாட்டோம் என சில அதிமேதவிகள் ரஸூல் (ஸல்) அவர்களை அடி பிறழாமல் பின்பற்றுகிறோம் என அவர்களின் அடி புரண்டு போனதைப் பறை சாற்றுகின்றனர். இவ்வாறு பர்ளுக்குப்பின் சப்தமில்லாமல் ஓதுவதை வழமையாகக் கொண்டு, தங்களது இரண்டுங் கெட்டான் நிலையை வெளிப்படுத்துகின்றனர். இவர்களால் வஹ்ஹாபிகளின் சொல்லைத் தட்டவும்முடியாமல்,ஸுன்னத் வல் ஜமாஅத் தார்களின் முடிவை விடவுமுடியாமல் இருதலைக்கொள்ளி எறும்பாய் மார்க்கத்தை விளங்காமல் விழிபிதுங்கி முழித்துக் கொண்டுள்ளனர்; ஒரு விஷயத்தில் நல்லதும் (சப்தமிட்டு துஆ ஓதுதல்) கெட்டதும் ஒன்று சேர்ந்

தால் அது கெட்டதுதான். அல்லாஹு தஆலாவும் குர்ஆனில்,

ادْخُلُوا فِى السِّلْمِ كَافَّةً ○

'இஸ்லாத்தில் பரிபூரணமாய் நீங்கள் நுழையுங்கள்' என்று கூறி ஒரு செயல் அது வரையறுக்கப்பட்ட ஷரத்துக்களுடன் முழுமையாய்ப் பின்பற்றப்படவேண்டும்; அதில் அரை குறையாய் நிற்பது ஈடேற்றம் கெட்ட முனாபிக் தனமென எச்சரிக்கை செய்துள்ளான். இதல்லாமல், சப்தமிட்டு துஆ ஓத முன்சொன்ன ஆதாரங்களே இவர்களுக்குப் பொருந்தும்.

இவ்வாறு தெளிவாய் திடமாய் ஷரீஅத் விளக்கிய பின், அதைக் கூடாது, அது ஒட்டை, இது குறை, இப்படித்தான் செய்ய வேண்டுமா என ஏளனம் செய்வது இஸ்லாத்தை அவமதித்து; அல்லாஹ் ரஸூலிடம் போர் தொடுப்பவன் போலாகி லஃனத் பெற்ற மூடர்களாய், தெரிந்தும் செய்யாத பெறுங்குற்றத்திற்கு ஆளானவர்கள் என எச்சரிக்கப்பட்டவர்கள்தான் இவர்கள்.

மேலும், "முஸ்லிம்களால் தொன்று தொட்டு செய்யப்பட்டு வரும் ஓர் அமல் ஷரீஅத்தில் ஆணித்தரமான உத்தரவு மூலம் கடமையாக்கப்பட்ட அமல் போலாகும்' என்றும், நல்ல அமலை அல்லாஹு தஆலாவின் பொருத்தம் நாடிச் செய்வதால் அது வழிபாடு, அவனுக்குச் செய்யும் இபாதத் என்பதாகும், ரஸூல் (ஸல்) அவர்கள் சொல்லாத ஒன்று நல்ல அமலாயிருந்தால் அதைச் செய்வதில் தவறில்லை என்பதும் மேலும் ரஸூல் (ஸல்) அவர்கள் செய்யாததால் ஒரு காரியம் கெட்டது எனத் தீர்ப்பளித்துவிடக்கூடாது என்றும், உலமாக்களால் அங்கீகரிக்கப்பட்ட ஸுன்னத்தான அமல்கள் அசல் ஸுன்னத்தின் தரத்தில் வைத்தே

போற்றப்படும் என்பதும் தொன்று தொட்டு மார்க்க அறிஞர்களால் செய்யப்பட்டுவரும் ஒரு காரியம். ஸுன்னத்துல் மத்பூஆ (தொடரப்பட்ட—பின்பற்றப்பட்ட ஸுன்னத்) என்ற சிறப்பை அடைந்து, ஷரீஅத்தின் நல்ல உயர்ந்த அமல்களில் ஒன்றாக்கப்படும் என்பதும் உஸுல் என்னும் இஸ்லாமிய அடிப்படைச் சட்ட ஞானத்தில் ஸுன்னத் வல் ஜமாஅத் அறிஞர்களால் தெரிவு செய்யப்பட்டுள்ளது.

ஆக ஸுன்னத்து ரஸுல் (ஸல்) பின்பற்றுதல், ஸுனனுல் ஹுதா என்பவை, ரஸுல் (ஸல்) அவர்கள் செய்த—சொன்ன—ஆமோதித்த தங்களுக்கு பின்னுல் தோன்றும் மார்க்க அறிஞர்களின் நடவடிக்கைகளைப் பின்பற்ற உரிமை கொடுத்துள்ளதும், அல்லாஹ் பின் பற்றச் சொன்ன இமாம்கள் அஹ்லுதிக்ர்-மார்க்கப் பேரறிஞர்களான முஜ்தஹிதீன், மஷாயிகுகள் அனைவர் களின் தீர்ப்பும் ஸுன்னத்து தான். இந்த பர்ளுத் தொழுதபின், ஓதும் துஆ சம்மந்தமாய் வந்துள்ள ஹதீது கள் ரஸுல் (ஸல்) அவர்களின் சொல், செயல், அனுமதி களின் உறுதி செய்யப்பட்ட ஹதீதுகள் ஸுன்னத்துகளா கும் என்றால், இதை ஏதோ காரணங்களைக் கூறி மறுப் பது ஈருலகப் பேரரசர் எம்பெருமானுர் முஹம்மதுர் ரஸுல் (ஸல்) அவர்களின் ஸுன்னத்தை எடுத்தெறி வதேயாகும்.

பர்ளுத் தொழுகைக்குப்பின் துஆ ஓதும்படி வந் துள்ள ஹதீதுகளும், துஆ எப்படிச் செய்ய வேண்டு மென ரஸுல் (ஸல்) அவர்கள் பல முறை பல இடங்களில் பல சந்தர்ப்பங்களில் மிகமிகத் தெளிவாய் அறிவித்துள்ளதால் சில இடங்களில் துஆச் செய்யுங்கள் எனச் சொன்னால் அச்சொல்லே துஆக் கேட்கும் சகல முறைகளையும் பொதிந்து கொள்ளுமென்பது யாவருக் கும் எளிதில் விளங்கும். ஆக இந்த முறையில், தொழுது ஜமாஅத்தாய் இருப்பதால் இரைந்து ஓதும்படி வந் துள்ள ஹதீதுகளைப் பின்பற்றி பர்ளுத் தொழுகைக்குப் பின் சப்தமிட்டு துஆ ஓத வேண்டுமென முஜ்தஹிதீன்

களும் மஷாயிகுகளும், மேற்கண்ட அடிப்படை நியதிகளை கவனித்து, ஸுன்னத் வல்ஜமாஅத் உலமாக்களும் தீர்ப்புச் செய்துள்ளனர். இதை விடுத்து, இது ஏதோ மார்க்கத்தில் ஆகாத செயல் என நினைப்பது ஷரீஅத்தை அதன் காவலர்களான முஜ்தஹிதீன்கள் மஷாயிகுகளை அவமதிப்பதாகும். மேலும் வலிமார்களான அவர்களை நோவினை செய்வது, இறைவனை நம்முடன் போர்ப் பிரகடனம் செய்யத் தூண்டுவது என்பதையும் இங்கு நினைவு கூரத்தக்கது.

இமாம் ஸுயூத்தி (ரஹ்) 'நதீஜத்துல் ஃபிக்ரு பில் ஜஹ்ரீ பித் திக்ர்' என்ற பெயரில் சப்தமிட்டு திக்ரு(துஆ) செய்யலாம் என ஒரு தொகுப்பை (ரிஸாலாவை) கோவை செய்துள்ளனர். இதில் நம்பகமான ஹதீதுத் திரட்டுகளிலிருந்து ஆதார பூர்வமான இருபத்தி ஐந்து ஹதீதுகளை அறிவிப்பாளர் பரம்பரைத்தொடர் பதிவு செய்த ஹதீது கலாவல்லுனர்கள் அவர்களின் கிரந்தம் போன்ற அனைத்தையும் தொகுத்தளித்தபின் கூறுவதாவது:

நாம் கூறிய அனைத்து ஹதீதுகளையும் படித்து, சிந்திப்பீர்களேயானால் அவை அறிவிக்கும் மொத்தமான கருத்தின் தெளிவான முடிவு, நிச்சயமாகத் திக்ரை (துஆவை) சப்தமிட்டு ஓதுவது மக்ரூஹ் இல்லை என்பது தெரிய வரும். இவ்வாறு சப்தமிட்டு ஓதுதல் தெளிவான ஆதாரப்படியும், இதைத் தவிர வேறொரு விளக்கம் இல்லை என முடிவு செய்யும்படியான வாசகங்களையும் கொண்டுள்ளது என முடிவு செய்யப்பட்டுள்ளதால் (திக்ரு, துஆவை சப்தமிட்டு ஓதுதல்) முஸ்தஹப்பான அமல் என்பது புலனாகும்.

அபூ ஹுரைரா (ரலி) அவர்களின் அறிவிப்பான: "எவனொருவன் என்னை ஓர் கூட்டத்தில் பிரஸ்தாபிக்கிறானோ அவனை அதைக் காட்டிலும் நல்ல கூட்டத்தில் எடுத்துரைப்பேன்", என்பதை புகாரீ பதிவு செய்துள்ள

தில் ''கூட்டத்தில் பிரஸ்தாபித்தல்'' என்பது சப்தமிடா மல் கூற முடியாது என்பது யாவரும் அறிந்த உண்மையாகும்.

மேலும், திக்ரில் சிறந்தது மவுனமானது என்ற ஹதீதைக் கொண்டு மறுப்பது, குர்ஆனை சப்தமிட்டு ஓதுவது, மெதுவாய் ஓதுவது பற்றி வந்துள்ள ஹதீதைப் போன்றதும், வெளிப்படையாய் செய்யும் தர்மம் மறைவாக தர்மம் செய்வதில் வந்துள்ள ஹதீதைப் போன்றதாகும். இதையே இமாம் நவவீ (ரஹ்) ஒருங்கிணைத்து முகத்தாட்சணை, பெருமை, பிறர் மெச்ச வேண்டுமென ஆசை இவற்றால் சப்தமிட்டு ஓதுங் குணமுடையவனுக்கு மெதுவாய் ஓதுவதையும், இக்குணங்களல்லாத நல்லொழுக்கம் உள்ளவர்கள் சப்தமிட்டு ஓதுவதையும், உறங்குபவர்களின் சமீபத்தில் (குர்ஆனை) சப்தமிட்டு ஓதுபவரை மெதுவாக ஓதும்படி ஏவப்பட்டுள்ளதை போன்றதே தவிர, மொத்தத்தில் சப்தமிடக்கூடாது என்பதல்ல. இது போன்றே திக்ரு (துஆ)விலும் ஹுக்ம் செய்யப்படும்'' என்று கூறுகிறார்கள்.

''சொல்லினால் சப்தமிடாமல் உம் ரப்பை மவுனமாய் பயபக்தியுடன் உம் மனதிற்குள்ளேயே ஜபிப்பீராக (திக்ரு செய்வீராக)...'' என்ற குர்ஆன் ஷரீபின் வசனத்தைக்கொண்டு சப்தமின்றியே திக்ரு (துஆ) செய்ய வேண்டுமென காரணம் காட்டப்பட்டால்— இதற்குத் தெளிவு.

1. இது மக்காவில் இறங்கிய ஆயத்தாகும். ரஸூல் (ஸல்) அவர்கள் மக்காவில் இருந்த காலம் வேத வெளிப்பாடுகளும், மார்க்க அனுஷ்டானங்களும் இணைவைப்போர்—முஷ்ரிக்குகளுக்கு தெரியாமல் நிகழ்த்தப்பட்டு வந்தமையாலும், ரஸூல் (ஸல்) அவர்கள் குர்ஆன் ஷரீபை சப்தமிட்டே ஓதுபவராய் இருந்ததால் அதைச் செவியுற்று குர்ஆனையும் அதை இறக்கி வைப்பவனையும் ஏசுபவர்களாயிருந்தார்கள். பின்னவைத் தடுப்பதற்காக

இந்த வசனத்தை இறக்கி சப்தமில்லாமல் அவ்வமயம் ஓதும்படி அறிவுறுத்தினான்.

மேலும் இந்த வசனம் அல்லாஹு அல்லாதவைவை வணங்குபவர்களை திட்டாதீர்கள். அறிவில்லாமல் அவர்கள் அல்லாஹு தஆலாவை திட்டுவார்கள் என்று விலக்கல் வந்த ஆயத் போலாகும் என இப்னு கதீர் தம் தப்ஸீரில் விளக்குகிறார்கள்.

2. திருமறை விளக்கவுரையாளர்களில் பெரும் பாலோரும் அவர்கள் மாலிக் இமாமின் ஆசானுன அப்துர் ரஹ்மானிப்னு ஸாலிமிப்னு அஸ்லம் என்பவர்களும், இப்னு ஜரீரும் "இந்த ஆயத்குர்ஆன் ஓதப்பட்டால் அதைச் செவிமடுங்கள், இன்னும் வாய்பொத்தி மவுனமாயிருங்கள்" என்ற குர்ஆன் ஓதுபவர் எப்படி இருக்கவேண்டும், எந்த நிலையில் ஓதவேண்டுமென்பதற்காகவே கூறப்பட்ட வசனம் என விளக்கம் செய்துள்ளனர்.

மேலும் குர்ஆன் ஓதும் போது மவுனமாய் இருக்க வேண்டுமென்பதில் மவுனம் முடிவில் ஒரு விளக்கமற்ற மூடலான நிலைக்கு கொண்டு போய் விடும் என்பதால் குர்ஆன் ஓதும்போது நாவினுல் பேசக் கூடாது என ஏவப்பட்டிருந்தாலும், அல்லாஹு தஆலாவின் ஞாபகம் மாருமல் நெஞ்சில் எப்போதும் இருந்து அதன் சிந்தனைகள் சதா நடந்து கொண்டே இருக்க வேண்டும் என ஷரீஅத்தின் உத்தரவு இல்லாமலில்லை. இதைத்தான் இந்த ஆயத்தில்—வ லா தகும் மினல் ஃகாஃபிலீன். (7:205) (நீங்கள் கவனமற்றவர்களாகி விடாதீர்கள்) என்று மௌனம் கொண்டு உறைந்து போய் விடாதீர்கள் என அல்லாஹு தஆலா எச்சரித்துள்ளான்.

குறிப்பு: ரஸூல் (ஸல்) அவர்கள் திருக்குர்ஆன் வசனத்திற்கு பொருள் விரிக்கும் போது, ஆயத் இறக்கப்பட்டதன் சூழ்நிலை, சந்தர்ப்பம், காரணம், அல்லாஹு

தஆலா அவனுடைய கலாமைக் கையாளும் விதம் போன்றவற்றை கவனித்தே விரிவுரை செய்யப்பட வேண்டுமென நிபந்தனை அருளியுள்ளனர். மேற்கண்ட இரண்டு விளக்கங்களும், இறைவசனத்தின் சரியான கருத்தை சொல்பவையாயுள்ளன. மேலும், ஆயத் இறைமொழியாயிருப்பதால் எத்தனை நிபந்தனைகளிட்டாலும் அதற்கென்றுள்ள தனிப்பட்ட ஒரு மகத்துவம் எப்போதும் மாறாமலிருக்கும், அந்த புனிதத்துவத்திற்கும் முக்கியம் தந்து, எதிலும் சேராமல், தனிப்படவும் விளக்கப்பட வேண்டும். இந்தத் தனித்தன்மை ஹதீதுகளுக்கு ரஸூல் (ஸல்) அவர்கள், தமக்குப் பின்னோர்கள் பின்பற்ற வேண்டும் என்பதற்காகக் கொடுத்த உரிமைகளுக்கும் அணுவளவேனும் மாறாமல் ஷரீஅத் வரம்புக்கு உட்பட்டு மார்க்க நிபந்தனைகளை மீறாமலிருக்க வேண்டும். இதைக் கண்டறிந்த வலிமார்கள், ஆரிபீன்கள், ஸூஃபியாக்களான இறைநேசச் செல்வர்கள் கூறுவதை இமாம் ஸூயூத்தி (ரஹ்) அவர்கள் மூன்றும் தெளிவுரையாய்த் தருகிறார்கள்.

3. சொல்லால் சப்தமிடாமலும், மௌனமாகவும் பயபக்தியுடன் உம் மனதிற்குள் உம் ரப்பை நீர் ஜபீப்பீராக (பிரார்த்திப்பீராக)

وَاذْكُرْ رَّبَّكَ فِيْ نَفْسِكَ تَضَرُّعًا وَّخِيْفَةً وَّدُوْنَ الْجَهْرِ مِنَ الْقَوْلِ ○

மேற்கண்ட ஆயத்துக்கு ஸூஃபியாக்கள் கூறுவதாவது: ஆயத்தில் ஏவப்பட்டிருப்பது பரிபூரணத்துவம் பெற்றவர்களுக்கு அரசரான பூராயம் பெற்ற ரஸூல் (ஸல்) அவர்களுக்கு மட்டும் தனிப்பட்டுக் கூறப்பட்டதாகும். அவர்களல்லாதவர்கள் மனக்குழப்பம்; கவனத்தைச் சிதைக்கும் சிந்தனைகள் ஆகியவற்றின் வயப்

பட்டு, மனநிலை பலவாறு அலைக்கழிக்கப்பட்டவர்களாய் இருப்பர். எனவே இவர்கள் திக்ரை (துஆவை) சப்த மிட்டு ஓத ஏவப்பட்டவர்களே. இதுதான் மனக்குழப் பத்தை மீறி இபாதத் செய்ய உதவும். மேலும், கட்டுப் பாடற்ற சிந்தனையை தடுப்பதில் மிகவும் கடுமையான செயல் திறனுமுள்ளதாகும். இதை உறுதிப்படுத்துவதே இமாம் பஜ்ஜாஜ் முஆதுப்னு ஜபல் (ரலி) மூலமாய்: றஸூல் (ஸல்) அவர்கள் ''எவரொருவர் இரவில் தொழு கின்றுரோ அவர் குர்ஆனை சப்தமிட்டு ஓதவும்'' என அறிவித்துள்ள ஹதீதாகும்.

اُدْعُوْا رَبَّكُمْ تَضَرُّعًا وَّخُفْيَةً اِنَّهٗ
لَا يُحِبُّ الْمُعْتَدِيْنَ ○

பொருள்: உங்கள் ரப்பை பயத்துடன் கூடிய கவலை யுடனும், மெதுவாகவும் அழைப்பீர் (துஆ செய்வீர்) களாக; இன்னும் நிச்சயமாய் வரம்பு மீறுபவர்களை அவன் நேசிப்பதில்லை (7:55)—என்ற ஆயத்தின்படி துஆவை மவுனமாகத்தான் ஓதவேண்டுமென கூறப் பட்டால்,

இதில் வரும் வரம்பு கடப்பவர்கள் என்பது துஆவில் சப்தமிட்டு ஓதுதல் என விரிவுரை செய்யப்படுகிறது என்று காரணம் காட்டப்பட்டால், அது தவறு என்ப தற்கு தெளிவு இருவிதம் உள்ளன.

1. இந்த ஆயத்திற்கு ஆதாரபூர்வமான தப்ஸீ ராவது ஷரீஅத்தில் ஏவப்பட்டதற்கு மேல் வரம்பு கடந்து அல்லாஹு தஆலாவிடம் கேட்பதையும், ஷரீ அத்தில் ஆதாரமற்ற துஆக்களை இட்டுக்கட்டிக் கேட்ப துமே என்று விபுரிக்கப்படுகிறது. இது இப்னு மாஜா,

ஹாகிம் ஆகியோர் பதிவு செய்து சரிகண்ட அபூ நுஆமா (ரலி) அவர்களின் அறிவிப்பாகும்.

2. அப்துல்லாஹ் இப்னு மிஃபல் (ரலி) அவர்கள் தங்களின் மகன், ''இறைவா! எனக்கு சுவர்க்கத்தில் ஒரு வெள்ளை மாளிகையைத் தந்தருள்வாயாக'' எனக் கேட்பதைச் செவியுற்று, நான் ரஸூல் (ஸல்) எனது உம்மத்தில் வரம்புக்கு மீறி துஆக் கேட்பவர்கள் தோன்றுவார்கள் எனக் கூற கேள்விப்பட்டுள்ளேன் எனக் கூறியுள்ளார்கள். இந்த விளக்கம் (தப்ஸீர்) ஸஹாபி செய்தது. இதுவே ஆயத்தின் தெளிவான விளக்கமும் இறை நாட்டத்தை நமக்கு விளக்குவதுமாகும்.

(அல்ஹாவி பதாவா ஸுயூத்தி (ரஹ்)
பக்கம் 132,133 பாகம் 2)

இந்தியாவில் மிகப்பெரும் உலமாக்களின் வழி வந்தவரும் தம் காலத்தில் தன்னிகரில்லாப் பாண்டித்தியம் பெற்றவரும் ஸுன்னத் வல் ஜமாஅத்தின் கொள்கை கோட்டையாய் திகழ்ந்தவரும் இவரின் ஆற்றலைக் கண்டு அக்காலத்தில் வாழ்ந்த வஹ்ஹாபிகளும் இதர மதப் புரட்டர்களும் இவர்களுக்கு தலைசாய்த்து நடக்கும்படியான உன்னதமான பண்பாளரும் ஹனபீ மத்ஹபின் ஆதாரபூர்வமான கிதாபுகளுக்கு விரிவுரையும் எழுதி இஸ்லாமிய உலகின் அனைத்துத் தரப்பு அறிஞர்களின் ஏகோபித்த மரியாதைக்கும், அன்புக்கும் ஒப்புதலுக்கும் பாத்திரமானவருமான இமாம் அபுல் ஹஸனாத் அப்துல் ஹை லக்னவீ (ரஹ்) அவர்கள் 'ஸிபாஹத்துல் ஃபிக்ரு பில் ஜஹ்ரி பித்திக்ரி' என்ற ஓர் உயர்வான தொகுப்பை-ரிஸாலாவை-பர்ளுத்தொழுகைக்குப்பின் திக்ரு, துஆவை சப்தமிட்டு ஓதலாம், இது ஆகுமான செயல்தான் என்பதைப் பற்றி விளக்கமாக எழுதியுள்ளார்கள்.

இத்தொகுப்பில் துஆ, திக்ருகளை ஜமாஅத்துடன் ஹல்காவாகவும், பர்ளுத் தொழுகைக்குப்பின்னும் சப்த

மிட்டு ஓதலாம் என விளக்கமாய், விவரமாய் அனுமதி தரும் 48 ஹதீதுகளை, அறிவிப்பாளர் பரம்பரைத் தொடர், இந்த ஹதீதைப் பதிவு செய்தவர், அவர் களின் கிரந்தம் போன்றவற்றை தெளிவாகக் குறித்து இந்த ஹதீதுகள் நான்கு மத்ஹபுகளில் எப்படி முழுவதுமாய் அமல் நடத்தப்படுகின்றன என்பதை அறிவித்து, குறிப்பாய் ஹனபீ, ஷாபிஈ மத்ஹபுகளின் அறிஞர்களின் அனைத்துத் தீர்ப்புகளையும் எடுத்துரைத்து துஆ, திக்ரை சப்தமிட்டு ஜமாஅத்துடன் பர்ளுத் தொழுகைக்குப்பின் ஓதலாம் என்ற தீர்ப்பு முடிவானது என அறிவிக்கிறார்கள். மேலும் துஆ, திக்ரு சம்பந்த மாய் வந்துள்ள குர்ஆன், ஹதீதுகளை நம் முன்னால் எடுத்து வைத்து நம்மையும் இதல்லாத வேறு தீர்ப்புச் செய்ய எவராலும் முடியாது, அப்படிச் செய்தால் மார்க்க நிந்தனை தவிர ஷரீஅத்தை பேணியதாகாது எனச் சொல்லும்படி தெளிவு செய்துள்ளார்.

மேற்கண்ட அவர்களின் தொகுப்பு-ரிஸாலா-அவர் களின் ஆறு ரிஸாலாக்களை ஒரே கிதாபாக வெளியிடப் பட்டுள்ள மஜ்முஉ ரஸாயிலு ஸித்தா என்பதில் இரண் டாமதாய் பக்கம் 39 முதல் 89 வரை இடம் பெற்றுள் ளது. இதில் (61-வது பக்கத்தில்) நாற்பதாம் ஹதீதில் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கும்: பர்ளுக்குப் பின் தக்பீர் சப்தமிட்டு கூறப்பட்டதை எடுத்துரைத்து இந்த ஹதீது ஸஹீஹாயிருப்பினும் யாரும் அமல் செய்ய வில்லை என மறுப்போருக்கு:

இந்த ஹதீதைக் கொண்டு பர்ளுத் தொழுகைக்குப் பின் திக்ரை (துஆவை) சப்தமிட்டு ஓதுவது முஸ்தஹப் என்பது அமல் செய்யப்படவில்லை என்பதால் ஒட்டு மொத்தமாக இது கூடாது என்பதற்கில்லை. ஏனெனில் நிச்சயமாய் இந்த ஹதீது பொதுவாய் சிலசமயம் சப்த மிட்டு திக்ரு செய்வதை ஆகுமென்று கூறுகின்றது. இதை விடுத்து இந்த ஹதீதுக்கு வேறொரு விளக்கம் செய்வது ஹதீதை மறுப்பதாகும். (பக்கம் 63)

ஹனபிய்யாக்களின் இஜ்மாவின் படி திக்ரை சப்த மிட்டு ஓதுவது மக்ரூஹ் என்பது சரியல்ல. பதாவா பஜ்ஜாஜிய்யாவில் சப்தமிட்டு திக்ரு செய்யலாம் எனத் தெளிவாய் வந்துள்ளது. இதை இமாம் ஸையிது ஹமவீ (ரஹ்) உறுதி செய்துள்ளனர். மேலும் ஹனபிய்யாக் களில் பிந்திய இமாம்களின் தலைவர் இமாம் ரமலீ (ரஹ்) ஆகும் என பத்வாக் கொடுத்துள்ளனர்.

மேலும் ஹனபிய்யாக்களுக்கு மிகப்பெரும் ஆதாரப் புருடராய் ஸுன்னத் வல் ஜமாஅத்தின் சிறப்புடைய வராய் ஹதீதின் மானிட ரூபமாய் உலவிய இமாம் அப்துல் ஹக் தெஹ்லவீ (ரஹ்) 'தல்ஸீலுல் முரீது' என் னும் பார்ஸீ கிதாபில் திக்ரு, அவ்ராதுகளைச் சப்த மிட்டு ஓதுவது ஆகும் என மிக விரிவாய்த் தீர்ப்பு வழங் கியுள்ளதை இங்கு சுருக்கமாய்த் தருகிறேன்.

சப்தமிட்டு திக்ரும், குர்ஆனும் முறையாய் ஓதுவது ஆகுமானதாகும். திக்ரு மஜ்லிஸுகளை பள்ளிவாசல் களும், மஜ்லிசுகளும் ஒன்று கூட்டுவது ஆகுமானதாகும். இது ஹதீதைக் கொண்டு ஷரீஅத்தில் ஆகுமாக்கப்பட் டுள்ளது. 'யார் என்னை ஒரு கூட்டத்தில் பிரஸ்தாபிக் கின்றூரோ அவரை நான் அதைக் காட்டிலும் உயர்ந்த கூட்டத்தில் பிரஸ்தாபிப்பேன்,'' என ரஸூல் (ஸல்) அவர்கள் (ஹதீது குத்ஸியில்) கூறியிருப்பதும், அல்லாஹு தஆலா உங்கள் முன்னோர்கள் திக்ரு செய்தது போல் அல்லது அதைக் காட்டிலும் மேலாகத் தன்னை திக்ரு செய்யச் சொல்லியிருப்பதும், மேலும் ஆதாரங்களும் கொடுக்க முடியும். ஸஹீஹ் புகாரியில் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களின் ஹதீதும் மேலும் அதில் ஸஹாபிகள் தொழுதபின் சப்தமிட்டு லா இலாஹ இல்லல்லாஹ் வஹ்தஹு... என்று ஓதுபவர்களாயிருந்தார்கள் என்ற ஹதீதும் மேலும் சில அறிவிப்புகளில் ஸுப்ஹு, மக்ரிபில் இவ்வாறு கூறுவார்கள் என வந்துள்ளதையும் எடுத்துக் கொள்ளலாம்.

இதல்லாமல் கைபர் போரிலிருந்து திரும்பும் போது, ஸஹாபாக்கள் மேடு பள்ளங்களில் ஏறி இறங்கும் போது, சப்தமிட்டு அல்லாஹ்வை திக்ரு செய்த போது ரஸூல் (ஸல்) அவர்கள், ''மனிதர்களே! உங்களின் மீதே நீங்கள் இரக்கம் கொள்ளுங்கள். ஏனெனில் நீங்கள் செவிடனையோ, உங்களை விட்டும் மறைந்தவனையோ அழைக்கவில்லை;'' என்ற ஹதீதில் சப்தமிட்டு (திக்ரு) செய்வதை மறுக்கவில்லை. போர் செய்து வரும் ஸஹாபாக்கள் மீது பரிவுடன் மெதுவாகவும், இலகுவாகவுமிருக்கும் பொருட்டுத் தான் கூறினார்கள்.

இன்னும் ரஸூல் (ஸல்) அவர்கள் அதிகமான இடங்களில் திக்ருகள், துஆக்களை சப்தமிட்டு ஓதியதும், இதையே அநேகமான நம் முன்னோர்கள் (இமாம்கள், மஷாயிகுகள்) அமல் செய்ததும் வந்துள்ளனர். கடுமையான பசியினால் வாடியவர்களாய் அகழ் போரில் ஸஹாபாக்கள், அகழியை தோண்டிக் கொண்டிருக்கும்போது ரஸூல் (ஸல்) அவர்கள் அவர்களின் நிலையைப் பார்த்து: ''இறைவா! வாழ்வு என்பது மறுவாழ்வே, அன்ஸாரிகளுக்கும், முஹாஜிர்களுக்கும் பாவம் பொருத்தருள்வாயாக!'' என சொல்லவாரம்பித்தார்கள். ஸஹாபாக்கள் இதற்கு பதிலாய், ''நாங்கள் முஹம்மது (ஸல்) அவர்களுக்கு பைஅத்—பிரமாணம் செய்து கொடுத்தவர்கள். அதிலேயே என்றென்றும் நிலைத்திருப்போம்'' எனக் கூறிய ஹதீது புகாரியில் வந்துள்ளது.

மொத்தத்தில் (திக்ரு, துஆ இரண்டையும்) குறிப்பிட்ட நேரங்களில் குறிப்பிட்ட இடங்களில் சப்தமிட்டு ஓதுவதில் பேச்சே இல்லை. பிரச்னை மேற்கண்ட விஷயத்தில் ஆதாரங்கள் இரண்டுக்கும் பொதுவானதாய் இருக்குமா? இருக்காதா என்பதில் தான். நம்மை எதிர்ப்பவர்கள் ஹதீதுகளில் குறிப்பிடப்பட்டுள்ள இடங்களில் ஓதுவதிலேயே குறிப்பிடப்பட்ட பிரயோஜனம் இருக்கும், அவையல்லாதவற்றில் சப்தமிட்டு ஓதுவதால் பயனடைய முடியாது என்றும், அல்லது திக்ரையும் துஆவை

யும் சேர்த்து ஓதினால்தான் சப்தமிட்டு ஓதவேண்டும்; ஏதாவது ஒன்றைத் தனியாக ஓதினால் சப்தமிட்டு ஓதக் கூடாது என்றும் சொல்லலாம். எனவே இரண்டையும் (தனித்தனியாய், சேர்ந்தோ) பொதுவாய் சப்தமிட்டு ஓதுவது ஆகும் என்பதற்கு ஆதாரம் கூறுவது அவசிய மாகும்.

புகாரீ, முஸ்லிம் இருவரும் ஒப்பிய அபூஹுரைரா (ரலி) அறிவிக்கும்: "அல்லாஹு தஆலாவை திக்ரு செய்வான் வேண்டி முஸ்லிம்களில் ஒரு கூட்டம் மஜ்லிஸாக அமர்வதில்லை — அவர்களை மலக்குகள் சூழ்ந்தும், இன்னும் அவர்கள் மீது ஸகீனத் (சாந்தமும், அருளும்) இறங்குவதையும் இன்னும் ரஹ்மத் அவர்களை பொதிந்துமே தவிர." என்ற ஹதீதிலிருந்து திக்ருக்கு மட்டும் தனியாய் ஒன்று கூடி அமர்ந்து செய்ய அனுமதி கிடைத்துள்ளது.

மேற்சொன்ன ஹதீதில் திக்ரு என்பதற்கு அல்லாஹு தஆலாவின் அருட்கொடையையும், இல்மையும் பற்றி பிரஸ்தாபிப்பது எனக் கூறுவது மிகவும் தூரமான வலிந்துரையாகும். சொன்னவுடன் விளங்கும் ஒரு வாசகத்தை அவசியமில்லாமல் அதற்கு மாற்றமான ஒன்றில் வலிந்துரைப்பது கூடாது. மனிதர்கள் தனித்தனியாய் திக்ரு செய்வது ஆகுமென்றிருப்பதில், திக்ரு மஜ்லிஸுக்காக ஒன்று கூடியவர்கள் தனித்தனியாய் மவுனமாய் திக்ரு செய்து கொள்ளவேண்டுமெனச் சொல்லவும் கூடாது. ஏனெனில் கூட்டமாய் அமர்ந்து மவுனமாய் திக்ரு செய்வதென்றால் ஜமாஅத்தாய் ஒன்று கூடியதும் அதற்குண்டான பயனும் கிடைக்காமல் போய் விடுமென்றால் ஒன்று கூடியதற்கு அர்த்தமே இல்லாமலாகி விடும்.

இதேபோல், துஆவுக்காக ஒன்று கூடுவது இமாம் முஸ்லிம் அவர்களின் நிபந்தனையின் படி ஹாகிம் அறிவிப்புச் செய்யும் ஹதீதில் ஊர்ஜிதமாகின்றது. ஒரு கூட்டம்

ஒன்று கூடி சில பேர் துஆக் கேட்டு சிலர் ஆமீன் கூறுவதில்லை—அவர்கள் துஆவை அல்லாஹு தஆலா அங்கீகரித்தே ஒழிய:

மேலும் குர்ஆன் ஓதுவதற்கு ஒன்று கூடுவது ஹதீதைக் கொண்டு உறுதியாக்கப்பட்டுள்ளது. 'அல்லாஹு தஆலாவின் வீட்டில் (பள்ளிவாசலில்) ஒரு கூட்டம் ஒன்று கூடுவதில்லை, குர்ஆனை ஓதி ஒருவருக்கொருவர் சொல்லித் தருவதில்லை—மலக்குகள் அவர்களை சூழ்ந்தே ஒழிய,' என்ற ஹதீதை நவவீ (ரஹ்) மற்றுமுள்ளோர் சரி கண்டுள்ளனர்.

இதிலிருந்தே துஆக்கள், விர்துகளை மஸ்ஜிதுகளிலும் மஜ்லிஸுகளிலும் ஓதுவது ஆகும் என்பதற்கு ஆதாரம் எடுத்துள்ளனர். மேலும் இமாம் ஷாஹ் வலியுல்லாஹில் தெஹ்லவீ (ரஹ்) ஸிபஹாத்துல் ஃபிக்ரு (பக்:65); மிஷ்காத்தின் விரிவுரை லம்அத்தில் ரஸூல் (ஸல்) அவர்கள் வித்ருத் தொழுத பின் மும்முறை ஸுப்ஹான மலிகுல் குத்தூஸ் என ஓதுபவர்களாயிருந்தார்கள், அதில் மூன்றும் முறை சப்தமிட்டு ஓதுபவர்களாயிருந்தார்கள் என்று உபை இப்னு கஅபு (ரலி) மூலம் அபூதாவூது, நஸஈ, இப்னு அபீ ஷைபா அஹ்மது, தாரகுத்னீ ஆகியோர் பதிவு செய்துள்ள ஹதீதையும் எடுத்துரைக்கிறார்கள்.

இந்த ஹதீதிலிருந்து திக்ரை சப்தமிட்டு ஓதலாம் என்பதற்கு ஷரீஅத்தில் ஆதாரமுள்ளது. இதுவே மார்க்கத்தில் சந்தேகமற உறுதியானதாகும்; எனினும் மௌனமாய் ஓதுதல் சிறந்ததாகும் எனக் கூறுகிறார்கள்.

முல்லா அலியுல் காரீ ஹனபீ (ரஹ்) அவர்களின் மிஷ்காத்தின் விரிவுரையான மிர்காத்தில் இந்த ஹதீதுக்கு விரிவுரை எழுதும்பொழுது: சப்தமிட்டு திக்ரு (துஆ) செய்வது முஸ்தஹப்பானதும் ஆகுமானதும் என்கிறார்கள். பக்கம் 66

ரஸூல் (ஸல்) அவர்களும், ஸஹாபாக்களும் அர்கம் (ரலி) வீட்டில் இருந்தபோது உமர் (ரலி) அவர்கள்

أَشْهَدُ أَنْ لَّا إِلٰهَ إِلَّا اللّٰهُ وَأَنَّكَ رَسُولُ اللّٰهِ ۝

என்று கூறி இஸ்லாம் ஆனபோது, அங்கிருந்த ஸஹாபாக்கள் அனைவரும் உரத்து தக்பீர் சொன்னதை மஸ்ஜிதில் (கஃபாவில்) உள்ளவர்கள் செவிமடுத்த விபரத்தை பஜ்ஜாஜ், தப்ருனீ, அபூ நயீமின் ஹுல்யா, பைஹகயின் தலாயில் இப்னு அஸாகிர் போன்றோர் பதிவு செய்துள்ளனர்.

(ஸிபாஹத்துல் ஃபிக்ரி ஃபில் ஜஹ்ரி பித்திக்ரி)

தொழுகைக்குப்பின் விர்துகளை, துஆக்களை சப்தமிட்டு ஓதுவது சுன்னத்தாகும்.

(இமாம் இப்னு ஹஜரின் ஃபதாவா ஹதீதிய்யா-பக்கம் 57)

மௌலிதுகள், திக்ரு மஜ்லிஸுகள் (துஆக்களுக்கு) கூடுவது ஆகுமானதாகும்.

(பதாவா ஹதீதிய்யா பக்கம் 112)



# 8. மறுப்பும்-விளக்கமும்

இஸ்லாத்தை, இஸ்லாமிய வேடம் பூண்டே அழிக்க எத்தனித்துத் தற்காலத்து பித்அத்காரர்களால் கஷ்புஷ் ஷுபஹாத் என்ற நூல் எழுதப்பட்டுள்ளது. இதில்

பர்ளுத் தொழுகைக்குப்பின் துஆக் கேட்ககூடாது என்பதற்கு பத்துவித மறுப்புகள் குறிக்கப்பட்டுள்ளன. இவர்கள் கிளப்பும் பிரச்னைகள்: இவர்களில் சிலர் மார்க்கத்தில் சில விஷயங்களை தெரிந்து கொண்டு, ஷரீஅத்தின் ஆதாரங்களை தவறாகப் பயன்படுத்தி நம்மிடமே ஐயம் எழப்புகின்றனர்—ஆனால் அறிவார்ந்த விளக்கம் தேடும் ஆர்வத்தினால் அல்ல. இவர்களின் மறுப்புகள் ஷரீஅத்திற்கு அப்பாற்பட்ட பிரச்னைகள், குழப்பங்கள், எதிர்ப்புகள், ஐயங்களின் வடிவில் கிளப்பப்படுகின்றன என்பதைத் தெரிந்து கொள்வது அவசியமாகும்.

இவர்களின் மறுப்புகளுக்கும், எதிர்ப்புகளுக்கும் நாம் வாழும் இக்கால கட்டத்தில் தெளிவும் பதிலும் தெரிந்து வைத்துக் கொள்வதே நமது ஈமானைக் காக்க வல்லதாகும் என்பதை கவனத்தில் கொண்டே இப்புத்தகத்தின் இறுதியில் அவர்கள் எழுப்பும் வாதங்களுக்கு பதிலும், தெளிவும் தரப்பட்டுள்ளன. இதை கவனத்துடன் படித்து, தெளிந்த உள்ளங்கொண்டு, தீனுல் இஸ்லாத்தை அல்லாஹு, ரஸூலின் வழி சென்ற முஜ்தஹிதீன்கள், மஷாயிகுகள், இறைநேசர்கள், இமாம்கள் கட்டிக் காத்த புனிதத்துவம் மாறாமலிருக்க அதைப் பின்பற்றி நம்மை நாம் கண்ணியம் பெற்ற புண்ணிய சீலர்களாய் ஆக்கிக் கொள்வோமாக. ஆமீன்.

மறுப்பு—1: துஆவை பர்ளுத் தொழுகைக்குப்பின் ஜமாஅத்தாய் உட்கார்ந்து ஓதுவது துஆ சம்மந்தமாய் வந்துள்ள ஹதீதை அசல்-ஷரஹையே மாற்றும் ஆதாரமற்ற அதிகப்படியான செயலாகும்.

பதில்: பர்ளுத் தொழுகை என்பது ஜமாஅத்துடன்தான் நிறைவேற்றப்படுவதாகும். அதன் பின்னால் ஓதுவது என ருஜூவாகி விட்டால்; ஜமாஅத்தாய் உட்கார்ந்து அவரவர்கள் ஓதிக் கொள்வது என்பது கூட்டப்பட்ட ஜமாஅத்துக்கே அர்த்தமில்லாமல் போய்விடுகின்றது.

ரஸூல் (ஸல்) அவர்கள் ஜாபிர் (ரலி) அவர்களை நோக்கி ''நான் உம்மை நேசிக்கின்றேன்; பர்ளுத் தொழுகைக்குப்பின் துஆக் கேட்பதை விட்டு விடாதீர்'' என்று சில துஆக்களை ஓதிக் காட்டியதும்—

துஆவின் சிறப்பைப் பற்றி ரஸூல் (ஸல்) அவர்கள் அதிகமாய்க் கூறி துஆக் கேட்கும்படி தங்கள் உம்மத்தினரைத் தூண்டியிருப்பதுடன், உங்களது தொழுகை உங்களுக்குள்ள நேரங்களில், மிகவும் நல்ல நேரங்களில் கடமையாக்கப்பட்டுள்ளது. ஆகவே நீங்கள் தொழுதீர்களேயானால், உங்கள் தொழுகையின்பின் துஆ கேளுங்கள் என உம்மத்துகளை ஒட்டு மொத்தமாய் ஏவி இருப்பது, ஜமாஅத்தாய் அதற்குண்டான நிபந்தனைகள்படி ஓதுங்கள் எனக் கூறியுள்ளார்கள் என்றே பெறப்படும். தனிப்பட்ட 'இபாதத்' ஆன துஆ; பர்ளுத் தொழுகையின் பின் கேட்கப்பட்டால் அதன் நிபந்தனைப்படியே நிறைவேற்றப்படும் என்பது யாவரும் அறிந்த உண்மை. மேலும், ஜமாஅத்தாய் அமர்ந்து ஒருவர் மற்றவர்கள் ''ஆமீன்'' சொல்லி துஆச் செய்த ஹதீதுகள், ஸஹாபாக்களின் செயல்கள் அனந்தம் உள்ளன. இவ்வாறு தெளிவாக வந்துள்ள, அமலாக்கப்பட்ட ஓர் இபாதத்தை 'ஷரஹையே மாற்றும் அதிகப்படியான செயல்' என்றால், இவ்வாறு சொல்பவர்களின் சொல்லும் செயலுமே ஷரீஅத்துக்கு கட்டுப்படாத அதிகப்படியான அதிகப்பிரசங்கத்தனம் என்பது யாவருக்கும் விளங்கும். மேற்கண்ட விஷயங்கள் அனைத்தும் மேலும் இப்புத்தகத்தின் முன்பக்கங்களில் கூறப்பட்ட அநேக விளக்கங்களையும் ஒருங்கிணைத்து இறைபக்தியுடன் ஷரீஅத்தின் அமலைச் செய்து வருவதை—மறுப்பது அறிவீனத்தின் பலவீனமும், மார்க்க உதாசீனமும் ஆகும்.

மறுப்பு—2: பர்ளுத் தொழுகைக்குப் பின் துஆ ஓதுவது, தொழுகை முடிந்தபின் அதிலேயே இருப்பது போன்றதாகும். அதாவது நான்கு ரகஅத் தொழுது துஆவிலிருப்பது ஐந்தாவது ரகஅத் தொழுவது போலும்;

ஒளுவில் ஒவ்வொரு உறுப்பும் மூன்று முறை கழுவ வேண்டுமென்றிருப்பதை அதற்குமேல் அதிகப்படுத்து வதுபோன்றதாகும். எனவே பொதுவாய் பர்ளுக்குப் பின் துஆ ஓதுவது ஓர் அதிகப்படியான செயலே.

பதில்: தொழுகைக்கு தனிப்பட்ட ஷரத்துகள், நிபந்தனைகள் உள்ளன. துஆவிற்கு தனிப்பட்ட ஒழுக்க முறை வரை முறைகள் வகுக்குப்பட்டுள்ளன. இரண்டை யும் ஒன்று சேர்ப்பது வெளிப்படையிலேயே குழப்பம் செய்வதாகும். தெளிவாகத் தெரிந்தவற்றின் அடிப் படைகளையே மறுப்பதாகும். தொழுகையின் அமைப் பும், துஆவின் அமைப்பும் நிறைவேற்றும் முறையில் எந் தெந்த விதத்திலும் ஒரே மாதிரியானதல்ல. அவ்வா றிருக்க இரண்டையும் இணைத்துப் பேசுவது ஷரீஅத்தில் அந்தந்த அமல்களுக்குக் கொடுக்கப்பட்டுள்ள வரம்பு களை மீறியதாகும் என்பதைத் தெரிந்து கொள்ளுங்கள். மேலும் இது மார்க்கத்தின் புனிதத்தைக் கருதாமல் வாய்க்கு வந்தவாறு பேசுவதாகும்.

அவர்களின் வாதமான பர்ளுக்குப்பின் ஓதும் துஆ அதிகப்படியான செயல் என்பதற்கு மனதிற்குத் தோன் றியதையெல்லாம் கூறத் தலைப்பட்டதில் ஒன்றே மேற் கண்டவாறு ஒளுவில் மூன்று தடவைக்குமேல் கழுவு வதை பர்ளுத் தொழுகையின் பின் ஓதும் துஆவுடன் இணைத்திருப்பது. ரஸூல் (ஸல்) அவர்கள் ஆற்றின் கரை யில் உட்கார்ந்து ஒளுச் செய்தாலும் அவன் தண்ணீரை அதிகமாய்ச் செலவு செய்யக் கூடாது என்றும்; ஒளுவில் உறுப்புகளை கழுவும் போது கூடவோ குறையவோ செய்தால் அது வரம்பு மீறிய தும், அநீதமானதுமான செயலுமாகும் என்ற கருத்தை யும் குறிப்பிட்டுள்ளார்கள். அல்லாஹு தஆலாவும் குர் ஆனில், வீண் விரயம் செய்பவர்களை நேசிக்கமாட்டான் எனத் தன்னை விட்டுத் தூரமானதைச் சுட்டிக்காட்டி யுள்ளான்.

ஆனல் துஆ விஷயத்தில் இத்தனை தடவைதான் கேட்க வேண்டும். அதற்குமேல் கூடவோ, குறைவோ கேட்கக் கூடாது என்று எந்த ஒரு சொல்லும் குர்ஆன் ஹதீதில் வரவில்லை. இதற்கு மாருக எப்போதும் துஆ வில் இடையருமலிருப்பதையே அல்லாஹ் விரும்பு கிருன். துஆக் கேட்காதவன் அல்லாஹு தஆலாவுடன் பலப்பரிட்சை செய்பவன் என எச்சரிக்கை செய்யப்பட் டுள்ளான். ஆக அடிப்படையில் மாறுபட்ட வேறுபட்ட இருகருத்துகளை இணைத்து அனுமானிக்கும் 'கியாஸ் மஅல்ஃபாரிக்' — மாறுபட்ட அனுமானமாகும், இது தவ ருகும்.

மறுப்பு—3: ஹனபிய்யாக்களின் இமாம்களே இது வேண்டுமென்று உண்டுபண்ணப்பட்டது, இதற்கு ஷரீஅத் தில் எந்த ஆதாரமுமில்லை என்கிருர்கள். அவ்வாறிருக்க நீங்கள் எப்படி துஆ ஓதலாம்?

பதில்: இது வீண் அபவாதமாகும். ஹனபி மத்ஹ பின் மரபும் குர்ஆன், ஹதீதிலிருந்தும் அணுவளவேனும் மாறுபடாததாகும். மேலே பர்ளுத் தொழுகைக்குப்பின் துஆ ஓதலாமா? என்ற தலைப்பின் கீழ் ஹனபீ மத்ஹ பினர்களின் தெளிவான ஆதாரமும், திடமான தீர்ப்பும் ஆணித்தரமான ஆய்வுகளும் கூறப்பட்டுள்ளன.

மறுப்பு—4: ரஸூல் (ஸல்) அவர்கள் இப்போது நீங்கள் செய்வது போல் செய்தார்களா?

பதில்: ரஸூல் (ஸல்) அவர்களின் (செயல்) ஃபிஅலியான-ஹதீதை மட்டும் எடுத்து அமல் செய்வது என்ருல் மார்க்கத்தில் எவ்வளவோ அமல்கள், சட்ட திட்டங்கள், ஏன் ஷரீஅத்தின் மார்க்க வடிவே இல்லா மல் போய் இதற்கும் முன் பக்கங்களில் தெளிவான ஆதாரம் கூறப்பட்டுள்ளது.

மறுப்பு—5: குர்ஆனில் இது சம்மந்தமாய் ஒன் றும் வரவே இல்லை. அவ்வாறிருக்க இதை எந்த ருபத் தில் செய்வது?

பதில் : ரஸூல் (ஸல்) அவர்களே நேரடியாய் இது சம்மந்தமாக ஸஹாபாக்களைத் தூண்டியும், ஏவியுமுள்ள ஹதீதுகள் அநேகம் உள்ளதால் பர்ளுக்குப்பின் ஓதும் துஆ ஷரஹில் 'தலாயிலுல் கவ்லிய்யத்' — ரஸூல் (ஸல்) அவர்களாலேயே வாக்கு மூலம் தரப்பட்ட மார்க்க அனுஷ்டானங்களின் உயரிய ஸ்தானத்தைப் பெற்று தனி அந்தஸ்து அடைந்து விட்டதால் இது அல்லாஹு தஆலா சொல்லாததைச் செய்வது கூடாது என்ற சட்ட வரம்பில் சேராது. எனவே இந்த அமலில் ஏவாததைச் செய்யும் தன்னிஷ்டப் போக்கு என்ற அத்துமீறிய தன்மையைப் புகுத்த முடியாது.

மறுப்பு — 6: நீங்கள் கூறுவது சரி என்றாலும், துஆ ஓதுவது முஸ்தஹப்பான ஓர் அமல். இதை பர்ளைப் போல் விடாமல் செய்து வருவது ஒரு முஸ்தஹப்புக்கு அதற்குண்டான ஸ்தானத்தை விட்டும் உயர்த்திய குற்றமும், தேவையற்ற பூணிப்புமாகிறதல்லவா?

பதில் : ரஸூல் (ஸல்) அவர்கள், அமல்களில் மிகச் சிறந்தது குறைவானதாயிருந்தாலும் அதைத் தொடர்ந்து இடையறாமல் செய்வதேயாகும் எனக் கூறியுள்ளார்கள். ஸூரத்துல் முல்க் (தபாரக்கல்லதீ) முஸ்தஹப்பான அமல்தான், அதைவிடாமல் தொடர்ந்து ஓதி வந்த இமாம் ஷய்கு பக்தாதீ (ரஹ்) அவர்களை அல்லாஹு தஆலா நேரில் புகழவில்லையா? முஸ்தஹப்பான 'தஹ்யித்துல் ஒளு' தொழுகையை பிலால் (ரலி) பேணுதலாய் விடாது தொழுது வரவில்லையா?

மிஃராஜில் ரஸூல் (ஸல்) அவர்கள் பிலால் (ரலி) அவர்களின் சப்தம்போன்றதை பல இடங்களில் கேட்டு, ''என்ன பிலால்? என்ன நல்ல அமல் செய்கிறீர்கள் உங்களின் பிரஸ்தாபம் வான லோகங்களிலெல்லாம் பேசப்படுகின்றதே'', என வினவ, அதற்கு பிலால் (ரலி) அவர்கள், ''நான் ஒளுச் செய்த உடன் அதன் காணிக்கையாய் ரகஅத் (நபில்) தொழுவேன்,'' என் மறுமொழி

பகர்ந்தனர். இந்நிகழ்ச்சியே முஸ்தஹப்பான அமலை இடையறுது செய்து வருவது எவ்வளவு பெரிய பதவிகளையெல்லாம் பெற்றுத் தரவல்லது என அறிந்து கொள்ள முடிகிறது.

மேலும் முஸ்தஹப்பான 'தஹஜ்ஜுத்' தொழுகையை எத்தனையோ இறைநேசர்கள், பெரியார்கள் மிகவும் பூணிப்புடன் இடையறுது தொழுது வந்தமையால் இறைநேசத்தின் பிணைப்பை நெருக்கமாக்கி இறையடியார்களில் முதன்மை ஸ்தானம் பெறவில்லையா...?!

இமாம் புகாரீ அவர்கள், புகாரீ ஷரீபில்: ''சிறிய அமலாயிருந்தாலும் இடையறுது தொடர்ந்து செய்வதே அமல்களில் மிகச் சிறந்தது'' என்ற ஹதீதை அன்னை ஆயிஷா (ரலி) அறிவித்துள்ளதாய் ஆறு ஸனதுகளில் (அறிவிப்பாளர் பரம்பரை தொடரில்) அறிவித்து அந்த ஹதீதின் முக்கியத்துவத்தையும்,பிரபல்யத்தையும் ஒரு நல்ல (முஸ்தஹப்பான) அமல் தொடர்ந்து செய்யப்படலாம் என்பதற்கு அதிக எண்ணிக்கையுள்ள ஸஹாபாக்கள் ஒப்புதல் தந்துள்ளதையும் காணலாம்.

மேலும் இமாம் புகாரீ இதே தலைப்பின் கீழ் அபூஹுரைரா (ரலி) அறிவிக்கும் ஹதீதையும் பதிவு செய்து ரஸூல் (ஸல்) அவர்கள், ஸஹாபாக்கள், தாபிஈன்கள் ஸாலிஹான (முஸ்தஹப்பான) அமலைத் தொடர்ந்து செய்யலாம் என்பது சந்தேகமற உறுதி செய்யப்படுகிறது.

இது விஷயத்தை இமாம் பத்ருத்தீன் ஐனீ அவர்களின் புகாரீ ஷரீபின் விரிவுரை பாகம் 10 பக்கம் 613-5 ல் பாபுல் கஸதி வல் முதாவத் அலல் அமலிஸ் ஸாலிஹ்—நடுநிலையான நடை முறையும் நல்ல அமல்களில் நிலைத்திருப்பதும் என்ற பாடத் தலைப்பின் கீழ் இதன் விளக்கத்தை எழுதியுள்ளனர். மேலும் அபூஹுரைரா (ரலி) அறிவிக்கும் வேறொரு பரம்பரைத்

தொடரை இமாம் முஸ்லிம் பதிவாக்கியுள்ளதை பக்கம் 615ல் எடுத்துரைக்கிறார்கள்.

இவ்வளவு மகோன்னதமான நியமன அமலின் தரத்தை மனம் போன போக்கில் அனர்த்தம் செய்வது விதண்டாவாதிகளின் எத்தனையோ அத்துமீறல்களில் ஒன்றே தவிர மார்க்கப் பேணுதல் அல்ல.

குறிப்பு: அல்லாஹுதஆலா இரவின் கடைசிப் பகுதியில் பூமிக்கு அருகிலுள்ள வானத்தில் இறங்கி ''என் அடியார்களில் யார் யார் பாவமன்னிப்புக் கோருகிறார்களோ அவர்களுக்குப் பாவமன்னிப்பு அளிக்கிறேன். யார், யாருக்கு என்னென்ன தேவைகளோ கேளுங்கள். அவற்றை நிறைவேற்றுகிறேன்'' என்று சொல்லும் ஹதீத் குத்ஸியை ரஸூல் (ஸல்) அவர்கள் அறிவித்துள்ளதையும், தஹஜ்ஜுதின் சிறப்பையும் அறிந்த இறைநேசர்கள், ஸாலிஹீன்கள், மஷாயிகுகள் ஆகிய சான்றோர்கள் அல்லாஹு தஆலா தன் அடியார்களுக்குத் தன் கொடையருளை பிரகடனம் செய்யும் நேரம், நாம் அவனை வணங்கினால் அவனுடைய உண்மையான அடியார்களாகி, அவனது திருப்பொருத்தம் பெற்றவர்களாவோம்,'' என இரண்டையும் இணைத்துத் தங்களின் அடிமைத்துவத்தை வெளிப்படுத்தி இவ்வாறு அமல் செய்கிறார்கள். ஆனால் இப்னு தைமிய்யா, 'அல்லாஹு இறங்கினான்' என்று ஹதீதில் வருவதால், 'அவனுக்கு நம்மை போல் பிண்டம்—உடல் உள்ளது,'' என இணைதுணையற்ற அல்லாஹுவுக்கு இணை கற்பித்து, தன் அறிவால் கெட்டதை அவரே நமக்கு வாக்கு மூலம் தந்து ஒத்துக் கொள்கிறார் என்றால் வஹ்ஹாபியக் கொள்கை மார்க்கத்திற்கு எவ்வளவு தூரம் அப்பாற்பட்டது என யாரும்விளங்கிக் கொள்ளலாம். மார்க்கஅறிஞர்கள்ஒரு ஹதீதை பயன்படுத்தும் விதமும், அதற்குப் பணியும் தன்மைக்கும் விதண்டாவாதிகள் ஹதீதை தம் அக்கிரமத்துக்கு காரணமாய் காட்டுவதையும் தெரிந்து கொள்ளலாம்.

மறுப்பு—7: ஷரஹில் பாத்திஹா (துஆவின்) சட்டம் தெளிவாக இல்லாததால் இதை மறுத்தால் ரஸூல் (ஸல்) அவர்களை நோவினை செய்ததாகாது.

பதில்: தெள்ளத் தெளிவாய் ரஸூல் (ஸல்) அவர்களும், ஸஹாபாக்களும் பர்ளுத் தொழுகைக்குப்பின் துஆ ஓதுவதை தெளிவுபடுத்தியிருப்பதும், அதன்பின் வந்த இமாம்கள், மஷாயிகுகள் உறுதி செய்திருப்பதிலிருந்தும் துஆ ஓதுவது ரஸூல் (ஸல்) அவர்களைப் பின்பற்றுவதேயாகும். இதை அமல் செய்யாதது அவர்களை மீறிய குற்றத்திற்கும் அவர்களை நோவினைசெய்தபெரும் பாவத்திற்கும் ஆளாக்கும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. "எதற்கெடுத்தாலும் ஆதாரமில்லை, ஆதாரமில்லை!" என்பது அவர்களே ஆதாரமில்லாதவர்கள் என்பதைத் தெளிவு படுத்தும்.

மறுப்பு—8: குர்ஆனில் துஆக் கேட்பதை எந்த ஒரு வரம்புக்கும் உட்படாமல் (முதலக்காக) கூறப்பட்டுள்ளதை, பர்ளுக்கு பின்னுல் என வரம்பு செய்வது சொல்லப்பட்டதை வேறொரு தாத்பரியம் செய்து அல்லாஹு தஆலாவின் ஆணைக்கு மாறு செய்த குற்றமாகும்.

பதில்: முதலக் என்னும் வரம்புகளுக்குள் வரையறுக்கப்படாமல் கூறப்பட்ட ஒன்றை; தொழுகைக்குப் பின் என்று முகய்யித் வரம்பு செய்வது சொல்லப்பட்ட முறைக்கும், நோக்கத்துக்கும் மாற்றமானது என்பது; பர்ளான—கடமையான காரியங்களுக்குக் கூறப்பட்ட ஒன்றை அந்த அமலை பங்கம் செய்யும் தரம் குறைக்கும் படியான வரம்பு என்னும் முகய்யிதுக்குக் கட்டுப்படுத்துவதான் குற்றமாகும்: ஆனுல் 'துஆக் கேளுங்கள்' என்று சொல்லியிருப்பது முஸ்தஹப்பான ஆணை தான். இன்னும் துஆ என்பது அல்லாஹு தஆலாவினிடத்தில் ஓர் அடியான் தன் இயலாமை, இல்லாமை, தேவை, அடிமைத் துவத்தை வெளிப்படுத்த வைக்கப்பட்ட அமலாகும்.

இந்த முஸ்தஹப்பான ஏவல் அது ஆணையிடப்பட்டது போலல்லாத சில அமல்களைச் சேர்த்து பூர்த்தியாகச் செய்வது விலக்கப்படவில்லை. அதல்லாமல் மேற்சொன்ன முதலக்கான ஏவல் ரஸூல் (ஸல்) அவர்கள் விவரித்து துஆ சம்மந்தமாய் கூறிய ஹதீதுகள் சில வரம்பைக் குறித்து விளக்குகின்றன. இந்த ஹதீதுகளைக் கொண்டு ஆயத்துக்கு விளக்கம் செய்வது அதன் பரிபூரணத்தை அதிகரிப்பதேயல்லாது மாற்றுவதாகாது. மேலும் முஸ்தஹப்பான அமலை தொடர்ந்து செய்து வருவதில் எந்தவித தவறும் ஷரீஅத்தால் இனங்காட்டப்படவில்லை என்பதையும் முன்னுள்ள பதில்களில் தெரிந்தோம்.

மறுப்பு—9 : ஆதாரமற்ற அதிகப்படியான அமல்களை ஸஹாபாக்கள் செய்யாமல் விட்டுள்ளனர். எனவே இதுவும் அவற்றில் ஒன்ருயிருப்பதால் இதை நாம் செய்வதற்கு எந்தவித முகாந்தரமுமில்லை.

பதில் : ஷரீஅத் என்பதே ஆதாரமற்றவற்றைச் செய்யக்கூடாது என்பதுதான். ஸஹாபாக்கள் ரஸூல் (ஸல்) அவர்கள் பர்ளுத் தொழுகைக்குப்பின் துஆ செய்த கவ்லீ ஹதீதையோ, வஹ்ஹாபிகளும், அவர்களின் கூற்றை இன்று பரப்ப முற்படும் இயக்கங்களும் சொல்லும் பிஅலீ ஹதீதுகளை இது சம்மந்தமாய் அறிவித்துள்ளவர்களும் ஸஹாபாக்கள் தாம். ஆகவே பர்ளுத் தொழுகைக்குப்பின் துஆக் கேட்பது அசைக்க முடியாத ஆணித்தரமான ஆதாரங்களின் மீது அமைக்கப்பட்டுள்ளது. இதுவிஷயத்தின் மேல்அனுமானம்செய்து(கியாஸ்) சட்டம் எடுப்பது கியாஸ்மஅல்ஃபாரிக் என்றஅடிப்படை விதிமாறுபட்டுள்ள ஒன்றின் மீது அனுமானித்துஎடுக்கப்பட்ட தவருன அபிப்ராயமும் வெறும் குயுக்தியுமே தவிர நிர்ணய பூர்வமான சட்டமில்லை.

மறுப்பு—10 : ரஸூல் (ஸல்) அவர்களிடமிருந்து, ''செய்தார்கள்'' என்ற ஆதாரம் தெரியவில்லையாதலால் அதைச் செய்வதற்கு வேருெரு ஆதாரமில்லாமல்

அமல் செய்வது மக்ரூஹ் ஆகும். அவ்வாறு செய்தால் அது ஃபஸாதான செயலின் வகையைச் சார்ந்ததாகும். அதுபோல் இந்த துஆ பர்ளுக்குப் பின் செய்தார்கள் என வேறொரு ஆதாரத்தின் மீது ருஜூ செய்யப்பட வில்லை. ஆகையால் துஆ ஓதுவது கூடாது.

பதில்: ரஸூல் (ஸல்) அவர்களிடமிருந்தும் பல ஆதாரங்கள் கூறப்பட்டுள்ளது, தெளிவான ஏவலுடன் கூடிய ஹதீதுகளும் வந்துள்ளன. நீங்கள் சொல்வதை ஒப்புக்கு ஏற்பினும்; ஆதாரமில்லாதது ஒன்றுக்கு அதைச் செய்யும்படி ஹுக்மு செய்தல் தடையாக மாட்டாது. ஏனெனில் ஹுக்மூ என்பது விபரிக்கப்படாத ஒரு விஷயத்தில் பேசாத ஒன்றைக் கொண்டு சட்டமிடப் படாதது, ஹுக்மு ஒன்றில் செய்துவிட்டாலே பல ஆதாரங்களின் பின்னணியில் உருவானது என்பதின் பொருள் பொதிந்துள்ளதால் தான், இது இஸ்லாமின் அடிப்படை சட்டப்பிரிவான உஸூலில் தவறுன முறைகளும், அனுமானங்களும்—''பஹ்து உஜூஹில் ஃபாஸிதா வல் கியாஸ்'' என்னும் பாடப் பிரிவில் விளக்கப்பட்டுள்ளது.

மேலும் நாங்கள் ஃபஜ்ரு, அஸரின் பர்ளு தொழுகைக்குப் பின் துஆ ஓதுவது ஆகுமென்று கூறுவது, பர்ளுக்குப்பின் நபில் தொழுவது ஆகுமென வந்துள்ளதால்தான் எனக் கூறுவது அபத்தமாகும். ஏனெனில் ஃபஜ்ரு, அஸர் தொழுகையின் பின் துஆ ஓதுவது சம்மந்தமாய் அநேக ஸஹீஹான ஹதீதுகள் வந்துள்ளன. ஆனால் இவ்விரண்டு பர்ளுக்குப்பின் நபில் தொழும்படி வரவில்லை. இதல்லாமல் ஃபஜ்ரு, அஸர்த் தொழுகைக்குப்பின் தொழ வேறொரு விதத்தில் அனுமானம் எடுக்கும்படியாய் எந்த ஆதாரமும்வரவில்லையாதலால், அந்தத் தொழுகைகளுக்குப்பின் துஆ ஓதுவதை வைத்துஎப்படி நபில்தொழுவதுஆகும் என அனுமானிக்க முடியும். இந்த கியாஸ்-அனுமானம் சரியானதுமில்லை இப்படியிருக்க ஹனபிய்யாக்கள் எப்படிக் கூறுவார்கள். அவ்வாறு கூறுவதாய் ஹனபி மத்ஹபினரின் சில கிதாபு

களை நீங்கள் ஆதாரங் காட்டுவது புரட்டும், மாற்றமும் செய்வதே. ஒரு செயலுக்கு ஓர் ஆதாரம் அந்த அமல் ஷரீஅத்தில் அமைக்கப்பட்ட முறையிலேயே தான் ஏற்றுக் கொள்ளப்படும். இதல்லாத மற்றொன்றுக்கு இதை வைத்து அமல் செய்ய ஷரீஅத்தில் உஸூலில் இடமில்லை. அவ்வாறு இருப்பின் அதைக் கொண்டு முன்னோர்களின் ஏகோபித்த முடிவு இருக்க வேண்டும் என்பதே ஹனபீ மத்ஹபின் முடிவு.

மேலும், இம்மறுப்பு வாதிகளும் அல்லாமா கர்கஷ்தவீ (ரஹ்) அவர்களை ஆசான் மிகப்பெரும் மார்க்க மேதை என ஏற்றுக்கொள்வர். அவர்களே பர்ளுத் தொழுகைக்குப் பின் நாம் தொன்று தொட்டுச் செய்து வருவது போல் துஆக் கேட்பது ஆகும்; மேலும் அது முஸ்தஹப் எனத் தீர்ப்பு வழங்கியுள்ளனர். அதை ஏற்காமல் மறுத்து, அவர்களைப் பெரிதாகப் புகழ்வதில் அர்த்தமே இல்லை.

மேற்கண்ட பத்து மறுப்புகளும் எண்ணிக்கையில் தான் பத்தே தவிர, அதிகப்படியான செயல் கூடாது என்பதையே திரும்பத் திரும்ப சொல்லியுள்ளதைக் காணலாம், என்னும் அவர்கள் கூற்று வெறும் மறுப்புக்கு கூறப்பட்ட வாசகங்களே தவிர ஷரீஅத்தின் எந்த ஒரு நிபந்தனையையும் பின்பற்றியதல்ல அவர்கள் பின்பற்றவும் முடியாது. ஏனெனில் ஷரீஅத்துக்கு அப்பாற்பட்டு வெளியே நின்றுகொண்டு என்ன விஷயத்தைக் கேட்க முடியும். இவ்வாறெல்லாம் உள்ள இவர்களின் நடவடிக்கைகளை நம்மவர்கள் தெரிந்து கொள்வான் வேண்டியே பத்துக்கும் பதில் கூறப்பட்டது.

அல்லாஹு தஆலா தன் அருட்கொடை பொதிந்த தயாள குணத்தின் நாட்டத்தால் ஸுன்னத் வல் ஜமாஅத்தில் நம் முன்னோர்களைத் தோன்றத் செய்து அதில் நிலைபடுத்தி, நம்மையும் அதன் அடிப்படையிலேயே ஆக்கி அளப்பரிய பெரும் பாக்கியத்தை

அவனே கிருபை கூர்ந்து அமைத்தது போல், நம் எஞ்சிய நாட்களிலும் நாம், நம் உற்றார், உறவினர், நம் சந்ததியினர், ஏனைய முஸ்லிம்கள் அனைவரையும் கியாமத் நாள் வரை நிலைத்து நிற்கவும், நம் சர்தார் எம்பெருமானார் முஹம்மத்துர் ரஸூல் (ஸல்) அவர்களின் ஷபாஅத் மறுமையில் கிடைக்கப் பெறுவோராகவும், இமாம்கள், வலிமார்களின் வழிநடந்து அன்னவர்களின் அன்புக்குப் பாத்திரமானவர்களாகவும், ஆக்கி அருள்வானாக. ஆமீன் யாரப்பல் ஆலமீன்.

யா அல்லாஹ்! எங்களை தீனுல் இஸ்லாத்தின் பேரிலும், திருக்குர்ஆனின் திவ்விய போதனைகளின் பேரிலும், நபி பெருமானார் (ஸல்) அவர்களுடைய ஸுன்னத்தின் பேரிலும் நிலைத்திருக்கச் செய்து, எங்கள் ஈமானை உறுதிப்படுத்தி, ஸுன்னத் வல் ஜமாஅத்தில் இணைந்திருக்கச் செய்து, அதன் பெருவழியைப் பின்பற்றித் தம் வாழ்க்கையை மேம்படுத்திக் கொண்ட ஸஹாபாக்கள், தாபியீன்கள், தபவுத் தாபியீன்கள், இமாம்கள், மஷாயிகுகள், அவ்லியாவுல் கிராம் என்னும் இறைநேசச் செல்வர்கள் ஆகியோர் வழிநடத்த ஸிராத்துல் முஸ்தகீம் என்னும் நேர்பாதையில் நடத்தாட்டி, "ஃதவா புத் தாரைன்" என்னும் ஈருலக நன்மைகளையும் நாங்கள் பெற்றுய்யப் பேரருள் செய்வாயாக!

اللهم احينا على الكتاب والسنة والجماعة
وتوفنا على الايمان والتوبة ○

## ஆசிரியரைப் பற்றி :-

ராமநாதபுரம் மாவட்டம் கீழக்கரையில் அடங்கப் பெற்றிருக்கும் சர்குரு நாதர் மெஞ்ஞான சொரூபர் தேவரீர் கல்வத்து நாயகம் (ரலி) அவர்களின் கலீபாவும்; கம்பம் கல்வத் நாயகம் தைக்காவில் அடங்கப் பெற்றிருக்கும் தேவரீர் ஆரிபுல்லாஹி ஜல்வத் நாயகம் என பிரசித்தி பெற்று 48 வருடங்கள் ஆன்மீக நெறியில் கல்வத்திருந்தவர்களின் பேரரும்; அவர்களிடம் கல்விப் பயின்றவரும்; தற்போது கம்பம் கல்வத்து நாயகம் தைக்காவில் காதிரிய்யா தரீக்காவின் கிலாபத் பீடத்தை அலங்கரித்து வருபவர்களான ஆரிபுபில்லாஹி ஜாமிஉல் புனூன் அம்பா நாயகம் என பிரசித்தி பெற்ற 'மௌலானா மௌலவீ அப்துர் ரஹ்மான் ஸயீதீ' அவர்களின் மகனும்; தற்போது திருப்பூர் மத்ரஸா அஸ்ஸிராஜுல் முனீர் அரபிக் கல்லூரியில் பேராசிரியராகப் பணியாற்றி வருபவருமான A. முஹம்மது அப்துல் கபூர் ஸயீதீ அவர்களால் எழுதப்பட்டது தான் இந்நூல்.